




உ

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:
ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி
ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள் அருளிய

# ஸ்ரீமுகம்

ஸ்ரீ வேலவனால் எழுதப்பட்டு, சென்னை அநுராகம் பதிப்பகம் ஸ்ரீ ஜி. மாசிலாமணியினால் வெளியிடப்படும் 'மாங்காடு ஸ்ரீ காமாக்ஷி மகிமை' என்னும் நூலில் லலிதோபாக்யானம், காமாக்ஷி விலாசம் முதலிய ப்ரமாண நூல்களை ஆதாரமாய்க் கொண்டு, பண்டாஸுரனின் ஆதிபத்யம், அவனுடைய ஸம்ஹாரம், ஸ்ரீ காமேச்வரரின் ஸூர்ய சந்திர ஸ்வரூபிகளான கண்களைப் பொத்தியதால் தனக்கு ஏற்பட்ட சாபத்தைப் போக்கிக் கொள்வதற்காக ஸ்ரீகாமேச்வரி தேவியானவள் காமாக்ஷியாய் அவதரித்து மாங்காட்டில் தபஸ் செய்தது, பிறகு காஞ்சீபுரத்தில் ஸ்ரீ ஏகாம்ர நாதரை விவாஹம் செய்து கொண்டது முதலிய சரித்ரங்களுடன், மாங்காட்டின் மகிமை, அங்கு ஸ்ரீ பகவத்பாதாசார்யாளால் ஸ்ரீ சக்ரப்ரதிஷ்டை, ஆவரண தேவதைகளின் விபரம் முதலிய விசேஷங்களும் விளக்கப்பட்டுள்ளன.

ஆஸ்திகர்கள் இந்தச் சிறந்த நூலின் மூலம் மாங்காட்டு ஸ்ரீ காமாக்ஷியின் மஹிமையை உணர்ந்து வழிபட்டுக் கொண்டு, இந்த தேவியின் அருளால் எல்லா மங்களங்களையும் அடைவார்களாக!

நாராயண ஸ்ம்ருதி:

17-11-78.
காஞ்சீபுரம்

## ஸ்ரீஅர்த மேரு



மாங்காட்டுத் திருக்கோயிலில் ஸ்ரீ ஆதிசங்கரபகவத்பாதாளால் பிரதிஷ்டைசெய்யப்பட்டுள்ள அர்த்மேரு இது. அஷ்டகந்தங்கள் எனப்படுகிற சந்தனம், அகில், பச்சைக்கர்ப்பூரம், குங்குமப்பூ, கோரோசனம், சிலாஜித், ஜடாமாஞ்சீ, கச்சோலம் ஆகிய எட்டு வகையான பரிமளப் பொருட்களைக்கொண்டு இது உருவாக்கப் பட்டது. இந்த அர்த மேருவிலே கோயில்கொண்டிருக்கும் தேவதை களைப் பற்றிய விளக்கங்களை, இந்நூலின்63வதுமுதல்67வதுவரை யிலான பக்கங்களில் காண்க.

உ

# மாங்காடு ஸ்ரீகாமாட்சி மகிமை

(மாங்காட்டு ஸ்தல புராணம்)

ஆசிரியர்

ஆசுகவி ஸ்ரீ. வேலவனார்



அநுராகம்
54, பாண்டி பஜார்
சென்னை-600017.

31-1

ஸ்ரீவித்யா வாசஸ்பதி, ஸ்ரீவித்யா மார்த்தாண்ட
பிரம்மஸ்ரீ C. V. ஸ்வாமி சாஸ்திரிகள்
வழங்கியருளிய

# முன்னுரை

ஓம்நமோ பகவத்யைஸ்ரீ சந்த்ரசேகர மூர்த்தயே |
ஸச்சிதானந்த ரூபிண்யை ஸ்வாத்ம போத ப்ரபூர்த்தயே ||

மாங்காடு எனப்படுகிற ஆம்ராரண்யம், பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டதான ஒரு திவ்ய க்ஷேத்ரம். உலகப் புகழ்பெற்ற காஞ்சிமாநகரில் கோயில் கொள்வதற்கு முன்னமேயே, ஸ்ரீலலிதா மஹாத்ரிபுரஸுந்தரீ பரா பட்டாரிகையாகிய அன்னை காமாக்ஷி தேவி இந்த மாங்காட்டிலே பன்னெடுங்காலம் தவக் கோலம் பூண்டிருந்தாள் என்றால், இத்திருத்தலத்தின் தொன்மையையும் பெருமையையும் எவரால் அளவிட்டுக் கூறமுடியும்?

இத்தகைய புண்ய க்ஷேத்ரத்துக்கு மஹரிஷிகளால் இயற்றப்பட்ட ஸ்தலபுராணங்கள் பண்டைக் காலத்தில் ஏதேனும் இருந்திருக்கத்தான் வேண்டும். ஆனால் இப்போது, அம்மாதிரிப் புராணம் எதுவுமே நமக்குக் கிடைக்கவில்லை. சிரஞ்ஜீவி வேலவன் எழுதியுள்ள "மாங்காடு ஸ்ரீ காமாக்ஷி மகிமை" என்னும் இந்த நூலானது, அந்தக் குறையை நன்கு நிறைவு செய்யும் விதத்தில் அமைந்துள்ளதைக்கண்டு, நான் மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன்.

வேலவன் ஒரு சிறந்த எழுத்தாளர். தமிழில் ஓர் உத்தமமான கவி அவருக்கு வடமொழி ஞானமும் உண்டு. எனக்கு நெருங்கிய நண்பர். எங்கள் குருநாதர் ஸ்ரீசிதானந்தநாதரின் திருவருளால் பூர்ண தீக்ஷை பெற்றவர்.

உண்மையில் அந்த ஆச்சார்யேந்திரர் தான் இந்த மாங்காட்டு ஸ்தலபுராணத்தை எழுதியிருக்க வேண்டியவர். எனினும், அந்தப் புண்ணியப் பேறு தம் சிஷ்யனுக்குக் கிடைக்கவேண்டும் என்ற கருணையினாலேயே, தம்முடைய வாழ்நாளில் அவர் அதை எழுதாமல் விட்டார் என்று எண்ண வேண்டியதிருக்கிறது.

ஸ்ரீசிதானந்த ஞானவள்ளல் இப்போது பூதவுடலோடு இல்லை. எனினும் அவர் ஸூக்ஷ்ம ரூபத்துடன் இருந்து, சிலசிஷ்யர்களுக்கு விசேஷமான அருளை வழங்கிவருகிறார். அந்த முறையில் தான், வேலவன் மூலம் அவர் இந்த மாங்காட்டு ஸ்தலபுராணத்தை வெளிப்படுத்தியிருக்கிறார் என்று சொல்லவேண்டும்.

பழமையான ஸ்தலபுராணங்களைப் போலவே இந்த நூலானது பலநுண்ணிய தத்துவங்களை உள்ளடக்கியதாய், மிகவும் அழகாக அமைந்துள்ளது. காஞ்சீ ஸ்ரீ காமகோடி ஆச்சாரியாளின் அருளாசியோடு வெளிவருகிற இந்த நூலை, பக்தகோடிகள் கருத்தூன்றிப்படித்து, இகத்துக்கும் பரத்துக்கும் உரிய எல்லா நன்மைகளையும் எய்துவார்களாக! இதை எழுதிய நண்பர் வேலவனும், வெளியிட்ட அநுராகம் பதிப்பகமும், பதிப்பாசிரியர் ஸ்ரீ G.மாசிலாமணியவர்களும் நீடுழிவாழ வேண்டுமாய், அன்னை ஸ்ரீ மாங்காட்டுக் காமாக்ஷியின் மலரடி பணிகின்றேன்.

சென்னை,
10-10-1978

இங்ஙனம்,
ஸ்ரீ குருபாததூளி
**C.V. ஸ்வாமி சாஸ்த்ரி**

ஸ்ரீவித்யா வாசஸ்பதி, ஸ்ரீவித்யா மார்த்தாண்ட

**பிரம்மஸ்ரீ C. V. ஸ்வாமி சாஸ்திரிகள்**

அருளிச்செய்த

# ஸ்ரீஆம்ராரண்ய காமாக்ஷீ அஷ்டகம்

ஓம் நமோ பகவத்யைஸ்ரீ சந்த்ரசேகரமூர்த்தமே|
ஸச்சிதாநந்த ரூபிண்யை ஸ்வாத்ம போதப்ரபூர்த்தயே ||

1) ஸ்ரீசங்கராசார்ய குருத்தமேந
ப்ரதிஷ்டிதே சக்ரவரே நிஷண்ணும் |
காமாம்பகாம் சூதவநாந்தரஸ்தாம்
பஜேஸதாபக்த வரேடிதாங்கரிம் ||

2) பஞ்சாக்நிமத்யே பரமேச சம்போ:
ஆஜ்ஞாவசாத்தாம் தபஸா ஜ்வலந்தீம் |
பஞ்சாகஹந்த்ரீம் பஜதாம் பஜேஹம்
காமாம்பகாம் சூதவநாந்தரஸ்தாம் ||

3) காஞ்சிபுரே ஸைகத லிங்கரூபம்
ஈசம் ஸதைகாம்ர தரோரதஸ்தாத் |
ஸம்பூஜயந்தீம் பரமேச்வராப்த்யை
காமாம்பகாம் ஸ்வே ஹ்ருதயே பஜேஹம் ||

4) ஸூர்யேந்து நேத்ரேச்வர நேத்ர யுக்ம
பிதாநதோஷ ப்ரசமாய தேவீம் |
தபஸ்திதாம் ஆம்ரவநேஸுபூதாம்
காமாம்பகாம் சித்ததலே பஜேஹம் ||

5) வைகுண்ட நாதப்ரிய பார்கவேச
மத்யஸ்தித க்ஷேத்ரதலே நிஷண்ணும் |
ஸ்ரீசுக்ரதீர்த்தஸ்ய தடேவஸந்தீம்
காமாம்பகாம் சித்த தலே பஜேஹம் ||

6) ஸ்ரீசேசவாகீச சசீச பூஜ்யாம்
ஸ்ரீசாரதா ஸேவிதபாதபத்மாம் |
ஸ்ரீராஜராஜேச்வர ஸேவிதாங்க்ரிம்
பஜேஹமாத்யாம் லலிதாம்பிகாம் தாம் ||

7) பாபாபஹந்த்ரீம் பஜதாம் ஜநாநாம்
தாபாப ஹந்த்ரீம் ஸ்மரதாம் ஜநாநாம் |
பாசாபஹந்த்ரீம் நமதாம் ஜநாநாம்
காமாம்பகாம் நௌமி சிதிஸ்வரூபாம் ||

8) ப்ராணப்ரயாண ஸமயே லயஜந்மஹீந
பதப்ரதாம் ஸுத்த சிதிஸ்வரூபாம் |
ஸச்சித்ஸுகாகார தநும் பஜேஹம்
காமாம்பகாம் சூதவநாந்தரஸ்தாம் ||

அநந்த கல்யாண குணப்ரதாத்ரீம்
நித்யம் சிதாநந்த ரஸஸ்வரூபாம் |
ஜயப்ரதாம் சந்த்ர கலாவ தம்ஸாம்
பஜேஸதா சூதவநாந்தரஸ்தாம்

சிவம்

## ஸ்ரீஆம்ராரண்ய காமாக்ஷீ
## த்யாந ச்லோகங்கள்

ஆம்ராரண்யபிலே தபஸ்திதவதீம்
பஞ்சாக்நி மத்யஸ்திதாம் |
ஹஸ்தே நோர்த்வ சிரோS பரேண ஹ்ருதயம்
ஸ்ப்ருஷ்ட்வா ஜடா தாரிணீம் ||

காமாக்ஷீம் பஜஸாங்க்ரி நாபி ஸுஷமாம்
ஏகாக்ர்ய பாதஸ்திதாம் |
யோகத்யாந பராயணீம் த்ரிபுவந
க்ஷேமங்கரீம் ஆச்ரயே ||

பஸ்சாத் த்விபாக பரிக்லுப்த ஜடாகலாபாம்
ப்ரத்யக்ர வல்கலதராம் பஸிதத்ரிபுண்ட்ராம் |
பஞ்சாக்ஷரீம் ஜபபடீம் தததீம்ச மாலாம்
பஞ்சாக்நி மத்யநிலயாம் ப்ரணமாமி கௌரீம் ||

சிவம்.

# 1. ஸ்ரீ காமாட்சியின் மஹத்வங்கள்

உலகில் பிறவியெடுத்த ஒவ்வொரு பிராணிக்கும் ஒரு தாய் உண்டு.

பிராணிகள் உடல், உயிர் என இரண்டு கூறுகளால்ஆகியவை.

உயிரானது எண்ணற்ற பிறவிகளை எடுக்கிறது. அந்த ஒவ்வொரு பிறவியிலும அதற்கு வெவ்வேறு உடல்கள் அளிக்கப் படுகின்றன.

இப்பிறவியிலே ஒரு பறவையாகத்திரியும் உயிரானது, இதற்கு முந்தின பிறவியிலே ஒரு மனிதனாக இருந்திருக்கலாம். இனி வரப்போகும் பிறவியிலே ஒரு தேவனாக வடிவெடுக்கலாம்.

இந்த முறையில், ஒவ்வொர் உயிருக்கும், அதனுடைய பரி பக்குவத்திற்குத்தக்கபடி, ஓர் அறிவிலிருந்து ஆறு அறிவு வரையி லான ஆற்றல்களைப் பெற்றுள்ள உடல்கள் இறைவனால் மாறிமாறி அளிக்கப்பட்டு வருகின்றன.

பிறவிதோறும் உடல்கள் மாறும்போது, அந்த உடல்களை ஈன்று அளிக்கின்ற அன்னையரும் மாறுகின்றனர். அதனால்தான், ''அன்னை எத்தனை எத்தனை அன்னையோ!'' என்னும் அருள்வாக்கு எழலாயிற்று.

ஆனால் இவர்களெல்லாம் பிராணிகளின் உடல்களுக்குத்தான் அன்னையரே தவிர, உயிர்களுக்கு அன்னையர் அல்லர்.

அகில புவனங்களில் உள்ள அனைத்து உயிர்களுக்கும் ஒரே அன்னையாய் விளங்குபவள், பராசக்தியாகிய ஸ்ரீ காமாட்சி தேவியே ஆவாள். அதனாலேயே மற்ற உலகியல் மாதாக்களி னின்றும் வேறு பிரிந்து அறிவதற்காக, அவளை ''ஸ்ரீமாதா'' என்று குறிப்பிடுகிறது ஸ்ரீலலிதா சஹஸ்ரநாம ஸ்தோத்திரம்.

உலகு அனைத்தையும் படைப்பவர் பிரம்மா; காப்பவர் திரு மால்; அழிப்பவர் உருத்திரன். இவர்கள் ஒவ்வொருவரும் தாமே முழு முதற்கடவுள் என்று சில சமயங்களில் எண்ணிக் கொள் வார்களாம். ஆனால், இம்மூவருக்கும் கூடத் தாயாக இருப்பவள் பராசக்தி.

அது மட்டுமல்ல. ஸரஸ்வதி என்ற சக்தியின் துணைகொண்டு பிரம்மா உலகத்தைப் படைக்கிறார். இலக்குமி என்ற சக்தியின் துணைகொண்டு திருமால் உலகத்தைக் காப்பாற்றுகிறார். உருத்திராணி என்ற சக்தியின் துணை கொண்டு உருத்திரன் உலகத்தை அழிக்கிறார். இம்மூன்று சக்திகளாகவும் விளங்குபவள் உண்மையில் பராசக்தியே ஆவாள. இதைக் கருத்திற்கொண்டே, மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழில், ''தனிமுதல்யாம் என்பார்க்(கு) அம்மனையாய், அவர் தம்மனை ஆனவள்'' என்று பரதேவதையைப் போற்றுகிறார் ஸ்ரீ குமரகுருபர ஸ்வாமிகள்.

அம்மனையென்றால், தாய் தம்மனையென்றால், தம்மனைவியர். அதாவது, பராசக்தியே மும்மூர்த்திகளுக்கும் தாயாகவும் இருக்கிறாள், தாரமாகவும் இருக்கிறாள். இந்த உயரிய தத்துவத்தை நினைவுறுத்தும் வகையிலேயே, ''தாய்க்குப் பின் தாரம்'' என்ற முதுமொழி எழலாயிற்று என்பர்.

கற்பக விருட்சம் என்பது வானுலகத்தைச் சேர்ந்த ஒரு தெய்விகமரம்; யார் எதைக் கேட்டாலும் தடையின்றி வழங்கக்கூடிய சக்தி வாய்ந்தது. அந்த மரத்தின் தன்மையை அறியாத ஒருவன், தற்செயலாக அதன் நிழலில் போய் நின்றான். அந்த நேரம் அவனுக்குப் பசி எடுத்தது. பசியைத்தீர்ப்பதற்கு ஏதேனும் உணவு கிடைத்தால் நலமாய் இருக்குமே என்று அவன் எண்ணினான். உடனே, ஒரு பெரிய தங்கத்தாம்பாளத்தில் அறுசுவை உண்டி அவன் எதிரே காட்சியளித்தது. திடீரென்று வந்த அந்த உணவைக் கண்டதும், அவன் வியப்பு அடைந்தான்.

''இந்த உணவைப் பரிமாறுவதற்கு இங்கு ஓர் இள மங்கை இருந்தால் எவ்வளவு நன்றாய் இருக்கும்!'' என்று அவன் நினைத்தான். அடுத்த வினாடியே, அங்கு ஓர் இளமங்கை தோன்றி அவனுக்கு உணவு பரிமாறினாள். அவன் உண்டு முடித்ததும் அவள் மயமாய் மறைந்து விட்டாள்.

''உண்ட களைப்புத்தீரச் சற்று படுத்துப் புரளுவதற்கு, இங்கு ஒரு கட்டில் இருந்தால் எவ்வளவு நலமாய் இருக்கும்!'' என்று அவன் கற்பனை பண்ணினான். உடனே, மிருதுவான மெத்தை தலையணைகளோடு கூடிய கட்டில் ஒன்று அங்கு காட்சியளித்தது. அவன் அதில் ஏறிப் படுத்தான்.

படுத்தவுடன், ''இந்தச் சமயத்தில் நமது கைகால்களைப் பிடித்துவிடுவதற்கும், மற்றைய உபசாரங்கள் செய்வதற்கும், சில பெண்கள் இருந்தால் எப்படி இருக்கும்!'' என்று அவன் மனக்கோட்டை கட்டினான். அடுத்த நொடியில் தெய்விகமான பேரெழில் வாய்ந்த கட்டிளங் கன்னியர் பலர் அங்கு தோன்றினர். அவர்களில் சிலர் அவனுடைய கால் கைகளைப் பிடித்து விட்டனர். மற்றும் சிலர் அவனுக்குத் தாம்பூலம் மடித்துக் கொடுத்தனர். பின்னும் சிலர் அவன் உடம்பிலே குளிர்ச்சியான, நறுமணம் மிக்க

கலவைச் சந்தனத்தைப் பூசினர். கையில் யாழ் எடுத்து, தம் குழலினும் இனியகுரலால் பாட்டுப் பாடினர் ஒரு சில கன்னியர். அந்தப் பாடல்களுக்கு ஏற்ற வகையில் ஆடல் புரிந்தனர் இன்னும் சில வனிதையர் இவற்றையெல்லாம் பார்த்துப் பரவசமும் பெருவியப்பும் ஒருங்கே அடைத்தான் அந்த மனிதன்.

கற்பகத் தருவும் காமாட்சிதேவியும்

அப்போது, அவனுடைய போதாத காலம், அவனது உள்ளத்திலே ஓர் ஐயப்பாடு தோன்றியது. "நாம் நினைத்துப் பார்க்க முடியாத அற்புதங்கள் எல்லாம் இங்கு நடக்கின்றனவே! இந்த மரத்தில் ஏதேனும் பேய் பிசாசு பூதம் இருக்குமோ?" என்று அவன் எண்ணினன். உடனே, அவன் எதிரில் ஒரு பெரிய பூதம் வந்து நின்றது. "ஐயையோ! இந்த பூதம் நம்மை அடித்து விடுமோ?" என்று அச்ச முற்றது அவன் உளளம். அவன் அஞ்சியவாறே, அந்த பூதமும் அவனை அடித்துச் சாய்ந்தது.

கற்பக விருட்சத்தின் இயல்பை விளக்குவதற்காக, இந்தக் கதையைக் கூறுவது வழக்கம். பரதேவதை இந்தக் கற்பகவிருட்சத்திற்கு நிகரானவள் (அதாவது, நாம் கேட்டதை எல்லாம் கொடுப்பவள்) என்று கூறுவார்கள். அது சரியல்ல. ஏனென்றால், கற்பகவிருட்சம் நமக்கு நன்மையை மட்டும் தான் தரும் என்று சொல்வதற்கில்லை. மேலே உள்ள கதையில் காணப்படுவது போல, அது நமக்குத் தீமையையும் அழிவையும் கூட அளித்து விடக்கூடும், ஆனல், பரதேவதை அப்படிச் செய்ய மாட்டாள். அவளுக்குத் தீமை செய்யத் தெரியாது நன்மை ஒன்றுதான் அவளுக்குத் தெரியும் அதனல்தான், அவளைத் தன் சக்தியாகக் கொண்டுள்ள பரமசிவனைப்பற்றிப் பாடும்போது, "நன்றுடையானைத் தீய(து) இல்லானை" என்கிறார் தேவார ஆசிரியர்.

நல்லவர்கள் மனத்தில் எப்போதுமே மங்களகரமான இனிய எண்ணங்கள் தாம் தோன்றிக்கொண்டிருக்கும். தீயவர்கள் எண்ணத்தில் அச்சமும் ஐயப்பாடுகளும் அடுத்தடுத்து உதயமாகும். கற்பக மரத்தடியில் தீயவர்கள் போய் நின்றால், அந்த அச்சமும் ஐயப்பாடுகளுமே உடனுக்குடன் பலிதமாகி அவர்களை உருக்குலைத்து ஒழித்துவிடும் அதனல்தான், "கற்பகத்தைச் சார்ந்தார்க்குக் காஞ்சிரங்காய் ஈந்ததேல், முற்பவததில் செய்த வினை" என்றார்கள் நம் மூதறிஞர்கள்.

பரிபூரண சரணகதி

ஆனல் அதே தீயவர்கள் அன்னை பராசக்தியின் முன்னே வந்து நின்றால், அவள் அவர்களது அச்சத்தையும் ஐயப்பாடுகளையும் அகற்றி அருள் புரிவாள். அச்சமும் ஐயப்பாடுகளும் ஒருவன் செய்த பாவங்களின் பயனகவே விளைகின்றன என்பது, தத்துவ நூல்களின் சாரம். அம்பிகை அந்தப் பாவங்களைப் போக்கி, நம் உள்ளத்தைப் பக்குவப்படுத்துகிறாள். இவ்வாறு பக்குவப்படுத்

தும் சக்தி, கற்பகத்தருவுக்குக் கிடையாது. ஆகவேதான், அம்பிகையைக் கற்பகத்தருவோடு ஒப்பிட்டுப் பேசுவது அவ்வளவு சரியல்ல என்பது சான்றோர் கருத்து.

கற்பகத்தரு நாம் எதைக் கேட்டாலும் கொடுக்கும். அப்படிக் கொடுப்பதால் நமக்கு நன்மை ஏற்படுமா, தீமை ஏற்படுமா என்பது அதற்குத் தெரியாது. ஏனென்றால், அது ஓர் அறிவற்ற ஜடப் பொருள், ஆனால், அம்பிகை அப்படி அல்லள். அவள் சித்ரூபிணி. நமக்கு நன்மை பயப்பது எதுதீமை பயப்பது எது என்பது, நம்மைக் காட்டிலும் அவளுக்கே நன்றாகத் தெரியும். ஆகையால் நம்முடைய அறியாமையின் காரணமாக நாம் விரும்பிக் கேட்டாலும் கூட. நமக்குக் கேடு விளைவிக்கக் கூடிய எதையுமே அவள் தரமாட்டாள். அவள் எது தந்தாலும், அது நமக்கு முழுக்க முழுக்க நன்மை அளிக்கக் கூடியதாகவே அமையும் என்பது ஆன்றோர் துணிபு. இந்த உண்மை உணர்வோடு அணுகும் போதுதான், அவளை நாம் பரிபூர்ண சரணாகதி அடைந்தவர்கள் ஆகிறோம்.

### அம்பிகை அருள் புரியும் முறைமை

சுருக்கமாகச் சொன்னால், அன்னை பராசக்தியின் திருவடிகளை நாம் தஞ்சம் என்று அடையும் போது, முதலில் அவள் நம்முடைய பாவங்களைப் போக்கி, நமக்குள்ள அச்சங்களையும் ஐயப்பாடுகளையும் அகற்றுகிறாள். அவ்வாறு பக்குவப்படுத்தப்பட்ட நிலையில். நம்முடைய உள்ளத்திலே சுபமான–மங்களகரமான எண்ணங்களே உதயமாகின்றன. அப்படிப் பட்ட எண்ணங்களையும் ஆசைகளையும் அவள் இனிதே நிறைவேற்றி வைக்கிறாள். அதனால் தான், பெற்ற தாயினும் உற்ற தாயாக உயிர்க்குலம் அவளை வழிபட்டு வாழ்த்துகிறது.

அம்பிகையை நாம் சரணடைவதால் அவளுக்கு ஒன்றும் லாபமில்லை. நமக்குத்தான் அளவிடற்கரிய நன்மைகளும் மேன்மைகளும் அதனால் ஏற்படுகின்றன. அவள் பக்திக்கு வசப்படுகிறவள். பக்தி என்ற வலையை விரித்தால், அவள் அதில் வலிய வந்து சிக்கிக் கொள்வாளாம். "பக்தி வலையில் படுவோன்காண்க!" என்பது மணிவாசகர் திருவாக்கு.

சரணாகதியைக் காட்டிலும் சிறந்த பக்தி எதுவுமே கிடையாது. சரணாகதியின் மூலம் நாம் அவளுக்கு அடிமையாகிற அதே நேரத்தில். அவள் நமக்கு வசமாகி விடுகிறாள். பக்தர்களுக்கு அவள் தன்னையே தந்து விடுகிறாள். அதைக்காட்டிலும் நாம் அடையக் கூடிய பெரிய பேறு வேறு என்ன இருக்கிறது?

மங்களமே தன் வடிவமாக விளங்குபவள் பரதேவதை. தன் பக்தர்களுக்கு எல்லா சௌபாக்கியங்களையும் அவள் வாரி வாரி வழங்குகிறாள். அதுமட்டுமல்ல. காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாத்சர்யம், அகந்தை, மமதை போன்ற உயிர்க் குற்றங்கள் அனைத்திலிருந்தும் அவள் நமக்கு விடுதலை அளிக்கிறாள். அவளை வழி படுபவர்களுக்கு உடனடியாகக் கிடைக்கின்ற முதற்

பரிசு மனச் சாந்தியே ஆகும். அந்தச் சாந்தியின் முதிர்ச்சி நிலையில் மனிதனே தேவனாக மாறிவிடுகிறான் என்பது, வேதாந்த நூல்களின் துணிபு

## தோன்றாத் துணை

சிதை, சிந்தை என வடமொழியில் இரண்டு சொற்கள் உண்டு. (சிந்தை என்றால் இங்கு கவலை என்று பொருள்.) உயிரற்ற உடலங்களைச் சிதையில் வைத்து எரிக்கிறோம். உயிருள்ள மனிதர்களையே சிந்தை எனப்படுகிற கவலை எரித்து விடுகிறது என்கிறது ஒரு வடமொழிச் செய்யுள்.

ஒரு மனிதன் எண்ணற்ற செல்வங்களைப் பெற்றிருந்தாலும், எவ்வளவு பெரிய பதவியில் வீற்றிருந்தாலும், மனத்தில் கவலை சூழ்ந்து விடுமானால் அவன் நரக வேதனைக்கு ஆளாகிறான். அந்த வேதனையிலிருந்து விடுபட விரும்பினால், அவன் அம்பிகையைத் தான் வழிபட வேண்டும்.

அம்பிகை துக்கங்களை எல்லாம் போக்கி அருள்பவள். சுகங்களை எல்லாம் தந்தருள்பவள். அவள் கருணையே வடிவமானவள். அவளை அன்போடு வழிபடுவோமானால், அவள் நமக்குத் தோன்றாத் துணையாக நின்று நம்மை இடையறாது காப்பாற்றுகிறாள். நம்முடைய அறிவுக்கு அறிவாய் இருந்து நம்மை நல் வழியில் நடத்திச் செல்கிறாள்.

அறவழியிலேயே நிலைத்து நின்று நம் வாழ்க்கையை நடத்திச் செல்லவேண்டும் என்ற ஆசை எல்லாருக்கும் உண்டு. ஆனால் நம்முடைய வினைப் பயனானது. பல சமயங்களில் நம்மை அப்படி நடக்க வொட்டாமல் தடுத்து நிற்கும். பொய் சொல்லக் கூடாது என்று உண்மையிலே நாம் ஆசைப் படுவோம். ஆனால் சந்தர்ப்ப சூழ்நிலைகள் பொய் சொல்லியே ஆக வேண்டிய கட்டாயத்திற்கு நம்மை உள்ளாக்கிவிடும். திருடன், கொலைகாரன் போன்ற குற்றவாளிகள் கூட, தம் உளமார ஆசைப் பட்டு அந்தக் குற்றங்களைச் செய்வதில்லை. சந்நர்ப்ப சூழ் நிலைகளும், பழக்க வாசனைகளுமே அவர்களைக் குற்றவாளிகள் ஆக்கி விடுகின்றன.

## தீவினைகள் வழிவிட்டு ஒதுங்கும்

அவ்வாறாயின், மனிதன் எப்படித்தான் நல்லொழுக்கத்தைக் கடைப் பிடிப்பது? அம்பிகையைச் சரணடைவதுதான் அதற்குரிய ஒரே வழி. அவளை வழிபடும்போது நம்முடைய தீவினைகள் வழிவிட்டு ஒதுங்குகின்றன. அப்போது அற நூல்களில் வரையறுக்கப்பட்டுள்ள அற நெறிகளினின்றும் வழுவாது ஒழுகும் ஆற்றல் நம்மிடம் உருவாகி வளர்கிறது.

"பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல்லை" என்கிறது தமிழ் மறை. மனிதராய்ப்பிறந்த ஒவ்வொருவரும்,நம் வாழ்நாளில் மிகப் பெரும் பகுதியைப் பொருள் ஈட்டும் முயற்சிகளிலேயே செலவிடுகிறோம். ஆனால், அந்த முயற்சிகள் எந்த அளவுக்குப் பலன் தருகின்றன?

ஒன்று, நம் தேவைக்குப் போதுமான அளவு பொருள் வருவதில்லை. அல்லது, வருகிற பொருள் நல்ல சுபமான செலவு களுக்குப் பயன்படாமல் தண்டச் செலவுகளுக்கும் தவறான செல வுகளுக்கும் பயன படுகின்றன. தவறான செலவுகளுக்குப் பயன்படும் போது, மனிதன் தான் ஈட்டும் பொருள்களினால் தனக்கும் தன்னைச் சார்ந்தவர்களுக்கும் நன்மை தேடிக் கொள்வதற்கு பதி லாகத் தீமையையே தேடிக் கொள்கிறான். செல்வச் செருக்கினால் மது, மாது, சூது போன்ற தீய ஒழுக்கங்களில் திளைத்துக் கெட்டு அழிந்துபோன எண்ணற்ற குடும்பங்களையே, இதற்குச் சான்றாகக் குறிப்பிடலாம்.

பொருளை ஈட்டுவதிலும் கூடத் தவறான முறைகளும் குறுக்கு வழிகளும் கையாளப் படுமாயின், அப்போது அந்தட பொருளி னால் இன்பங்களுக்குப் பதிலாகத் துன்பங்களே விளைகின்றன. ஆனால், ''முற்றிலும் நியாயமான வழியிலேயே பொருள் ஈட்ட முடியுமா?'' என்று கேட்கப் படலாம். முடியாது என்ற முடிவுக்கு வந்தவர்கள தாம், அதைத் தவறான வழிகளில் ஈட்ட முற்படு கிறார்கள்.

### பெருஞ் செல்வங்களைப் பெற்று மகிழலாம்!

பொருளினால் நாம் உண்மையான நற்பலன்களை அடைய வேண்டுமானால், அதனை அறவழிகளிலேயே ஈட்டவேண்டும், அற வழிகளிலேயே செலவிட வேண்டும். அது நமக்கு மாறாத மன நிறைவை அளிக்கக் கூடிய அளவிலும் கிடைக்க வேண்டும். அப் போது தான் செல்வத்தால் பெறத்தக்க பெரும் பயன்களை எல் லாம் நாம் பெற்றவர்கள் ஆவோம்.

தவறான வழிகளில் பொருள் ஈட்டுவது, அதைக் தவறான வழிகளில் செலவிடுவது, பணம் கோடி கோடியாய் வந்தாலும் மனம் திருப்தி அடையாமல் தவிப்பது, இம்மூன்றுமே செல்வத் திற்கு உள்ளசாபக்கேடுகள், இந்தக் கேடுகள்(இல்லாத) அதாவது அறவழியில் ஈட்டப்படுகிற, அறவழிகளில் செலவிடப் படுகிற, மன நிறைவைத் தருகிற) பெருஞ்செல்வத்தை நாம் பெறவேண்டு மாயின், அதற்குரிய ஒரேவழி அம்பிகையின் திருவடிகளைச் சரண டைவதே ஆகும்,

வாழ்க்கையில் நாம் அனுபவிக்கக் கூடிய நியாயமான இன் பங்கள் ஏராளமாக இருக்கின்றன. அவற்றிற்கான சாதனங்கள் பலவற்றை நாம் பொருளைக் கொடுத்து விலைக்கு வாங்கி விட முடியும். ஆனால் அப்போதும் கூட, அந்தச் சாதனங்களினால் கிடைக்கக்கூடிய சுகபோகங்களை நம்மால் அனுபவித்து விடமுடி யும் என்று சொல்வதற்கில்லை.

வீட்டிலே தடபுடலாக விருந்து நடந்து கொண்டிருக் கிறது. ஆனால், அந்த விருந்தை அளிப்பவருக்குக் கொடிய வயிற்று வலி; அவரால் எதையுமே சாப்பிட முடிவதில்லை. அறுசுவை

உண்டி அருகில் இருந்தும், அவரால் அதை உண்ண முடியாமற் போவது வினையின் பயனே அன்றி வேறு அல்ல என்பர் வேதாந்த நூலோர்.

ஒருவனுக்கு அழகில் சிறந்த இளம் மனைவி கிடைக்கிறாள். ஆனால் திருமணம் ஆன இரவிலேயே அவர்களுக்குள் ஒரு தீராத மனக்கசப்பு ஏற்பட்டு, அவர்கள் வேறுபட்டுவிடுகின்றனர். அதன் விளைவாக, வாழ்க்கையில் பன்னெடுங் காலம் இல்லற இன்பத்தையே அவன்அறியாதவனாகி விடுகிறான்.

வேப்பங்கனியை விரும்பினால் காக்கையாகத் தான் பிறக்கவேண்டும்!

உணவு கிடைக்காமல் பட்டினி கிடப்பது உலக இயற்கை, திருமணமாகாமல் பிரம்மச்சாரியாய் இருப்பது உலக இயற்கை. ஆனால், உணவிருந்தாலும் அதை உண்ண முடியாமல் போவது உண்டு; திருமணம் ஆகியிருந்தாலும் இல்லறம் நடத்த முடியாமல் போய்விடுவதுண்டு. இதைத்தான் ''எடுத்து வைத்தாலும் கொடுத்து வைக்கவில்லை'' என்று கூறுவார்கள்.

உலகில் சுகபோகங்களைக் குறைவின்றி அனுபவிக்க வேண்டுமாயின், அவற்றிக்கான சாதனங்களை மட்டும்தேடிக் கொண்டால் போதாது; அம்பிகையின் திருவருளையும் கூடவே தேடிக் கொள்ள வேண்டும். திருவருளைத் தேடிக்கொண்டால், சாதனங்கள் தாமாகவே நம்மைத் தேடிவந்து அடையும் என்பதில் ஐயமில்லை.

திருவருளின் துணையால், ஒரு காக்கையானது தனக்கு மிகவும் பிரியமான வேப்பம் பழங்களை நிரம்பச் சாப்பிடுகிறது. ஆனால் எவ்வளவு சாப்பிட்டாலும் அதற்கு அந்தம் பழத்தின் மீதுள்ள ஆசை குறைவதில்லை என்று வைத்துக் கொள்வோம். அப்போது, அந்தப் பழத்தைச் சாப்பிடுவதற்காகவாவது அதுமீண்டும் காக்கையாகத்தான் வந்து பிறவி எடுக்க வேண்டும். காக்கைப் பிறவியை ஒழித்து அது குயிலாகப் பிறக்க விரும்பினால், அதற்கு முன் நிபந்தனையாக, அது வேப்பம் பழத்தின் மீது வைத்துள்ள ஆசையை விட்டு ஒழித்து, மாங்கனியினிடத்தே சுவை காண வேண்டும்.

அவ்வாறே ஒரு பன்றி தன் பிறவியை மாற்றிக் கொண்டு அடுத்த ஜென்மத்திலாவது யானையாகப் பிறக்கவேண்டும் என்று ஆசைப்பட்டால், அதுதான் வழக்கமாக உண்ணுகிற மலத்தின்மீது உள்ள ஆசையை விட்டொழித்து, கரும்பிலே சுவை காண முயல வேண்டும்.

மனிதன் செய்ய வேண்டிய முயற்சி யாது?

இப்படியே உலகில் உள்ள ஒவ்வொரு பிராணியும், தன்னுடைய கீழ்த்தரமானஆசைகளை விட்டொழித்து உயர்ந்தபொருட்களிடத்தே மனத்தைச் செலுத்தும் போதுதான், அது உயர்ந்த பிறவியை அடைய முடியும். இந்தநியதி மனிதனுக்கும் பொருந்தும்.

விலங்கினங்களுக்குள்ளே மனிதன் தான் உயர்ந்தவன். இருந்தாலும், மனிதப்பிறவியைக் காட்டிலும் உயர்ந்த பிறவிகள் பலப்பல உண்டு. கந்தர்வர்கள், யக்ஷர்கள், கின்னரர்கள், கிம்புருடர்கள் இவர்களெல்லாம் மனிதரிலும் மேலானவர்கள். இவர்களைக் காட்டிலும் மேம்பட்டவர்கள் தேவர்களும், அவர்களது தலைவனாகிய இந்திரனும். இந்திரனைக்காட்டிலும் மேலானவர்கள் பிரம்மா, விஷ்ணு, உருத்திரன் என்னும் மும்மூர்த்திகள். அந்த மும்மூர்த்திகளிலும் பெரிது பிரம்மம் அல்லது சிவம் எனப்படுகிற சச்சிதானந்தப் பரம்பொருள். அதைக்காட்டிலும் மேலானநிலை என்று சொல்லத்தக்கது எதுவுமே இல்லை. அந்தப் பரம்பொருள் நிலையை அடைவதற்கே மனிதன் முயற்சி செய்ய வேண்டும். அந்த முயற்சியின் முதற்படியாக அவன் என்ன செய்யவேண்டும் என்றால்,—

குயிலாகப் பிறவி எடுக்க விரும்பினல் காக்கை எவ்வாறு வேப்பம் பழத்தின் மீதுள்ள ஆசையை விட்டொழிக்க வேண்டுமோ, யானையாகப் பிறவி எடுக்க விரும்பினல் பன்றி எவ்வாறு மலத்தின் மீதுள்ள ஆசையை விட்டொழிக்க வேண்டுமோ;

அவ்வாறே, பிரம்மா, விஷ்ணு, உருத்திரன இம்மூவருக்கும் மேலான சிவபரம் பொருளாகவே தன்னை ஆக்கிக் கொள்ள ஆசைப் படுகிற மனிதன், அதற்கு முதற்படியாக இவ்வுலகியல் இன்பங்களிலுள்ள ஆசைகளை விட்டொழிக்க வேண்டும் என்பது உபநிதடங்களின் முடிபு.

ஆனல், உலகியல் இன்பங்களின் மீதுள்ள ஆசையை விட்டொழிப்பது அவ்வவு எளிதான காரியமல்ல. மனிதன் குதிரையை அடக்கலாம். யானையை அடக்கலாம், கரடியை அடக்கலாம். புலியை அடக்கலாம். சிங்கத்தை அடக்கலாம். ஆனல், அவன் தன் மனத்தை அடக்குவது, இவை எல்லாவற்றைக் காட்டிலும் மிக அரிதான காரியம் என்கிருர் தாயுமானர்.

திக்கெட்டிலும் சென்று பல நாடுகளை வென்று அடக்கிய மாமன்னர்களைப் பற்றி நாம் உலக வரலாற்றிலே படித்திருக்கிறோம். ஆனல், அவர்களும் கூடத் தம் மனத்தை அடக்கினவர்கள் அல்லர் காரணம், ஆசைகளிலிருந்து விடுபட்டால் அல்லாது, மனம் அடங்கமாட்டாது. அவ்வாருயின் அந்த ஆசைகளை விட்டொழிப்பது எவ்வளவு பெரிய செயற்கருஞ் செயல் என்பதை எண்ணிப்பாருங்கள்.

### கடலைக் கையால் நீந்திக் கடக்க முடியுமா?

உலகியல் இன்பங்களின் மீதுள்ள ஆசைகளிலிருந்து விடுபட்ட நிலையே வீடு எனப்படுவது. வடமொழியில் இதனை முக்தி என்றும், மோட்சம் என்றும் சொல்வார்கள். இந்த முக்தியும் மோட்சமும் ஒருவன் இறந்த பிறகுதான் அவனுக்கு சித்திக்க முடியும் என்று பலர் நினைக்கிருர்கள். இது தவருன கருத்து. இந்தப்பிறவியிலேயே, நாம் உயிரோடு இருக்கும் போதே, இப்போதே நாம் அந்த முக்தியைப் பெறலாம். அப்படிப் பெற்றவர்கள் தாம் ஜீவன் முக்தர்கள் எனப்படுவோர். பகவான் ரமண

மகரிஷி, இராம கிருஷ்ண பரமஹம்ஸர், சுவாமிவிவேகானந்தர், மகரிஷி அரவிந்தர், இவர்கள் எல்லாம் அத்தகைய ஜீவன் முக்தர்களே ஆவர். இன்னும் வெளியே தெரியாத ஜீவன முக்தர்கள் உலகத்தில் எண்ணற்ற பேர்கள் இருந்திருக்கிறார்கள்; இன்றைக்கும் இருக்கிறார்கள்.

இவர்களைப் போலவே தானும் ஒரு ஜீவன் முக்தன் ஆக வேண்டுமென்ற ஒரு மிகப்பெரிய குறிக்கோள் ஒருவனுக்கு இருக்குமாயின், அதற்கும் அவன் ஸ்ரீ பராம்பிகையின் துணையைத் தான் நாடவேண்டியது இருக்கிறது. அப்படி நாடினவர்களுக்கு உலகியல் ஆசைகளிலிருந்து விடுபடுவதாகிய வீடு பேற்றினை அவள் விரும்பி அளிக்கிறாள். அவளுடைய துணையில்லாமல் தன் சொந்த முயற்சியினாலேயே ஒருவன் ஆசைகளை விட்டொழிக்க முற்படுவது, கொந்தளிக்கின்ற பெருங்கடலை ஒரு மரக்கலத்தின் துணையின்றி வெறும் கைகளால் நீந்திக் கடப்பதற்கு முயல்வதைப் போன்ற ஒரு துர்லபமான காரியமே ஆகும்.

## இகத்திலும் பரத்திலும் இன்பம் சித்திக்கும்

ஆகவே, அறநெறியில் ஒழுகுதல், மனநிறைவான பொருள் ஈட்டுதல், உயரிய இன்பங்களை அனுபவித்தல், அவற்றை அனுபவிக்கும் ஆசையிலிருந்து விடுபடுதல் என்ற நான்கு சித்திகளும் இறைவியின் திருவருளால் மட்டுமே நமக்குக் கைகூட இயலும் என்றாகிறது. இந்த சித்திகளைத் தமிழில அறம், பொருள், இன்பம், வீடு எனவும், வடமொழியில் தர்ம, அர்த்த, காம, மோட்சங்கள் எனவும் கூறுவார்கள். இவை நான்கிறகும் பொதுவான பெயர் புருஷார்த்தம் எனப்படுவது, "புருஷார்த்தப்ரதா" (அதாவது, புருஷார்த்தங்களை அருள்பவள்) என்று அவளைப் போற்றிப் புகழ்கிறது இரகசிய நாம ஸாஹஸ்ரம்.

இந்தக் கட்டத்தில், இதை படிப்பவர்களின் உள்ளத்திலே ஒரு முக்கியமான கேள்வி எழக்கூடும். அதாவது, "அம்பிகை மட்டும்தான் புருஷார்த்தங்களை அருள்வாளா? சிவன், திருமால், கணபதி, முருகன் போன்ற பிறதெய்வங்கள் அவற்றை அருள மாட்டார்களா?" என்று அந்த அந்த தேவதையை வழிபடுகிறவர்கள் வினவக்கூடும். அந்த வினவுக்கு விடையளிக்கும் வகையில் அமைந்திருக்கிறது,

"யத்ராஸ்தி போக: நஹிதத்ரமோக்ஷ:
யத்ராஸ்திமோக்ஷ: நஹிதத்ரபோக: |
ஸ்ரீஸுந்தரீ ஸாதக புங்கவாநாம்
போக: ச மோக்ஷ: ச கரஸ்த ஏவ ||

என்னும்வடமொழி சுலோகம். எங்கு எங்குபோகங்கள் அனுபவிக்கப்படுகின்றனவோ, அங்கு எல்லாம் முக்திக்கு இடம் இல்லை. எங்கு எங்கு முக்தி சித்திக்கிறதோ, அங்கெல்லாம் போகங்களுக்கு இடமில்லை. ஆனால், ஸ்ரீ மஹாதிரிபுரசுந்தரியாகிய பரதேவதையை வழிபடுகிறவர்களுக்கு மட்டும், போகமும் முக்தியும் ஒருங்கே சித்திக்கின்றன. இதுவே அந்த சுலோகத்தின் பொருள்.

அம்பிகையின் துணையின்றி, இறைவனால் அசையக்கூட முடியாதாம்!

படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்கிற ஐந்தொழில்களையும் பரமசிவன் இடையருது நடத்திக் கொண்டிருக்கிறார் என்பதாகச் சிவாகமங்கள் முழங்குகின்றன. இவற்றையே சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம், திரோதானம், அநுக்ரஹம் என்னும் பஞ்சகிருத்தியங்களாக வடநூலார் கூறுவார்கள். நடராஜப்பெருமானது தாண்டவம் இந்தப் பஞ்சகிருத்தியங்களைக் குறிப்பிடுவதே ஆகும். ஆனால், தமது திருநடனத்தின் மூலம் இவ்வைந்து தொழில்களையும் நடத்துவதற்கான ஆற்றலை, அவர் பராசக்தியிடமிருந்தே பெறுகிறார் என்பது ஆகமங்களின் துணிபு.

''சிவ: சக்த்யா யுக்தோ யதி பவதி சக்த: ப்ரபவிதும்
நசேதேவம் தேவோ நசலுகுசல: ஸ்பந்திதுமபி|''

என்று கூறுகிறது ஸௌந்தர்ய லஹரி என்கிற ஸ்ரீ வித்யா தந்த்ரம்.

இதையே,

''சிவம் எனும் பொருளும் ஆதிசக்தியொடு
சேரின் எத்தொழிலும் வல்லதாம்;
இவள் பிரிந்திடின் இயங்குதற்கும் அரி(து)
அரிதெனு மறை இறைக்குமால்|''

என்று, ஓர் அழகான கவிதை வடிவில் தமிழிலே மொழி பெயர்த்து அருளியிருக்கிறார் மஹா கவி வீரைக்கவிராஜ பண்டிதர்.

ஆதி சக்தியாகிய பராம்பிகை சிவத்தின் இடத்தே வெளிப்பட்டு விளங்கும்போதுதான், படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்தொழிலையும் தன் திருநடனத்தால் இயற்றக்கூடிய ஆற்றல் பரமசிவனுக்கு ஏற்படுகிறது. அவள் அவ்வாறு வெளிப்பட்டு விளங்காமல் சிவம் என்ற பரம் பொருளினிடத்தே லயமாகிஅடங்கி விடுவாளாயின்,அந்த சிவனால் அப்படி இப்படி அசைவதற்குக் கூட இயலாமல் போய்விடும். சிவமே அப்போது சவமாகி விடுகிறது என்று கூறுவார்கள்.

படைக்கும்போது பிரம்மாவாகவும், காக்கும்போது விஷ்ணுவாகவும், அழிக்கும்போது உருத்திரனாகவும், மறைக்கும் போது ஈஸ்வரனாகவும், அருளும்போது சதாசிவமாகவும் விளங்குவது பரம்பொருளாகிய பரசிவமே அல்லவா? அந்தப் பரசிவமே பராசக்தியின் லயத்தினால் சவநிலையை அடையும்போது, பிரம்மா விஷ்ணு. உருத்திரன் ஈஸ்வரன், சதாசிவன் ஆகிய ஐவரும்கூட, ஐந்து பிரேதங்களாகிவிடுகின்றனர். இந்த ஐந்து பிரேதங்களையும் ஆசனமாகக் கொண்டு, அவற்றிற்கு மேலே வீற்றிருக்கிறாளாம் ஸ்ரீ ராஜராஜேஸ்வரி என்ற லலிதாம்பிகை. அதனாலேயே, அவளைப் ''பஞ்சப்ரேதாஸநாஸீநா'' என்று குறிப்பிடுகிறது ஸ்ரீ லலிதா சஹஸ்ரநாம ஸ்தோத்திரம்.

இதன் பொருள் என்ன?

நாம் எல்லாம் எவ்வளவு பெரிய்
பாக்கிய சாலிகளாகளாய் இருக்கவேண்டும்?

தேவி பராசக்தி உள் நின்று உணர்த்தாவிடின் அல்லது செலுத்தாவிடின், பிரம்ம தேவனுல் உலகத்தைப் படைக்க முடியாது; விஷ்ணுவால் உலகத்தைக் காப்பாற்ற முடியாது; உருத்திரனுல் உலகத்தை அழிக்க முடியாது; ஈஸ்வரனுல் உயிர்களின் உள்ளொளியை மறைத்து, உலகியலே நோக்கி அவர்களை ஊக்குவிக்க முடியாது; அவ்வாறு உலகியலில் சிக்குண்டு தவிக்கும் உயிர்களை அதனின்றும் விடுவித்து, உள்ளே உயிருக்கு உயிராய் ஒளிவீசி நிற்கும் பரம்பொருளின்பால் உயிர்களை சதாசிவனுல் ஈர்க்க இயலாது.

எனவே தான், தமக்கு உயிரூட்டி ஊக்குவிக்கின்ற அன்னை பராசக்தியை, பிரம்மா, விஷ்ணு, உருத்திரன் என்னும் மும்மூர்த்திகளும் அன்போடு வணங்கி வழிபடுகிறுர்களாம்.

அந்த மும்மூர்த்திகளாலேயே வழிபடத்தக்க பரதேவதையை ஒரு சாதாரண மனிதனும் வழிபடுகிறுன் என்ருல், அதற்கு அவன் எவ்வளவு பெரிய பாக்கியம் பண்ணியிருக்கவேண்டும்? இதற்குமுன் பல கோடி பிறவிகளில் செயற்கரிய புண்ணியங்கள் பலவற்றைச் செய்து, அவற்றின் பலன்களை அவ்வப்போது கேட்டு வாங்கி அனுபவித்துத் தீர்த்து விடாமல் சேமித்து வைத்திருக்கும் ஒருவனுலேயே, அம்பிகையை வணங்குவதற்கும் துதிப்பதற்கும் இப்பிறவியில் இயலும் என்கிறுர் ஆதிசங்கர பகவத்பாதர். அதாவது, பல கோடி பிறவிகளில் செய்யப்பட்ட நிஷ்காம்ய கர்மாக்கவினுல் பரிபக்குவப்பட்டுள்ள ஒருவனுக்குத்தான், பராம்பிகையை வணங்க வேண்டும்-வாழ்த்த வேண்டும் என்ற ஆர்வமே உள்ளத்தில் உதயமாகுமாம். அத்தகைய மகத்தான புண்ணியம் செய்யாதவர்களுக்கு, அவளைப்பற்றிய எண்ணமே ஏற்படாதாம். இவ்வாறு பேசுகிறது ஸௌந்தர்ய லஹரியின் முதலாவது செய்யுள்.

அந்தப் பராசக்திதான் மாங்காட்டிலே அர்த்தமேரு வடிவத்திலும், தவக் காமாட்சியாகவும் விளங்கிக் கொண்டிருக்கிறுள். அப்படியானுல், அவளை தரிசித்து மகிழ வேண்டும் என்ற ஆர்வத்தோடு அங்கு வருகிற பக்த கோடிகள் எவ்வளவு பெரிய பாக்கியம் செய்தவர்களாய் இருக்க வேண்டும்?

நிலாவின் ஒளி மாளிகையிலும் வீசுகிறது. காடுகளிலும் வீசுகிறது. ஆனுல், அந்த சுகத்தை மாளிகைகளில் உள்ளவர்கள் மட்டுமே அனுபவிக்கிறுர்கள். அதேபோல, அம்பிகையின் கருணை எல்லாஉயிர்களிடத்தும் வியாபித்து விளங்கினுலும், அதன் பயனை உணர்ந்து அனுபவிக்கும் பேறு பெற்றவர்கள், இந்த மாங்காடு போன்ற திருத்தலங்களில் வந்து அவளை தரிசிப்போரே ஆவர் என்பதைக் சொல்ல வேண்டியது இல்லை.

## 2. ஸ்ரீ லலிதாம்பிகையின் உற்பவம்

சிவ பெருமானுடைய நெற்றிக் கண்ணால் மன்மதன் சுட்டெரிக்கப்பட்ட வரலாறு எல்லாருக்கும் தெரியும். மன்மதன் எரிந்த அந்த சாம்பலைக் கொண்டு, மஹாகணபதி வேடிக்கையாக ஒரு மனித உருவத்தை சமைத்தார். அதைப் பார்த்துப் பார்வதி தேவி உற்சாகம் அடைந்தாள். அவளது விருப்பத்திற்கு இணங்க பரமசிவன் அந்த சாம்பல் பொம்மைக்கு உயிர்கொடுத்தார்.

மன்மதனுடைய சரீரச் சாம்பலில் இருந்து உருவாக்கப்பட்டதால், அது பார்வைக்கு மிக அழகாக இருந்தது. அதே சமயத்தில் அசுரகுணம் படைத்ததாகவும் அது விளங்கியது.

சிறிது காலம் சென்ற பின், அசுரன் கங்கா நதிக்கரையை அடைந்து, பரமசிவனை நோக்கித் தவம் செய்யத்தொடங்கினான். முதலில் பதினாயிரம் ஆண்டுகள், பின்னர் நூறாயிரம் ஆண்டுகள், அதற்கு அப்புறம் பன்நெடுங்காலம் அவன் எவராலும் செய்ய இயலாத ஒரு கடினமான தவத்தைச் செய்தான். அதற்கு இரங்கி, பரமசிவன் அவன் எதிரே தோன்றினார். ''நான் எல்லாரையும் வெல்ல வேண்டும். ஓர் அன்னையின வயிற்றில் பிறந்த எவராலும் எனக்கு மரணம் ஏற்படக் கூடாது. படைத்தல், காத்தல், அழித்தல் உள்பட எல்லா ஆற்றல்களையும் நான் பெற வேண்டும்'' என்று அவன் வரம் கேட்டான். பரமசிவனும் அவனுக்கு அவ்வாறே வரம் அளித்து மறைந்தார்.

அதன் பிறகு, அந்த அசுரன்நேரே பார்வதி தேவிடம் சென்று, தான் வரம் பெற்ற நற்செய்தியை மகிழ்ச்சியோடு தெரிவித்தான். தேவியும் அவன் மீது கருணை கூர்ந்து, ''நீ பாதாள லோகத்திற்குச் சென்று, அங்கே அரசு புரிந்து கொண்டு இரு. ஆனால் எக் காரணத்தை முன்னிட்டும் தேவர்களைப் பகைத்துக் கொள்ளாதே'' என்று அறிவுரை கூறி அனுப்பினாள்.

அதன்படியே அவன் பாதாள லோகத்தை அடைந்து, அங்கே அசுரர்களின் வேந்தனாக முடி சூட்டிக் கொண்டு ஆட்சிபுரிந்தான்.

சிறிது காலத்திற்கெல்லாம், மூவுலகங்களையும் தன்னுடைய ஆட்சியின்கீழ் கொண்டுவர வேண்டும் என்ற ஆசை அவனுக்கு ஏற்பட்டது. உடனே அவன் தன்னுடைய மாபெரும் படைகளைத் திரட்டிக்கொண்டு, திக் விஜயம் செய்யப் புறப்பட்டான். அப்போது பிரம்ம தேவர் அவன் முன் தோன்றி, பார்வதி தேவியின் அறிவுரையை அவனுக்கு நினைவுபடுத்தியவராய், ''நீ பாதாள லோகத்தைமட்டுமன்றி, பூலோகத்தையும் வேண்டுமானால் ஆண்டு கொள். ஆனால், தேவலோகத்திற்கு மட்டும் படை எடுத்து வராதே!'' என்று அவனை வேண்டிக் கொண்டார்.

''அப்படியானால், இந்திராணியையும், கற்பகத்தரு காமதேனு சிந்தாமணி போன்ற ஐஸ்வர்யங்களையும், இந்திரன் எனக்குக்கப்பமாகக் கொடுத்து விடவேண்டும்'' என்றான் அந்த அசுரன்.

பிரம்மாவுக்குக் கோபம் வந்து விட்டது, ''நீ என்ன பெரிய பண்டனுக இருக்கிருயே!'' என்ருர் அவர். (பண்டன் என்ருல் கோமாளி என்று பொருள்.) அன்று முதல் அவனுக்கு பண்டாசுரன் என்று பெயர் வழங்கலாயிற்று.

பண்டாசுரனது அட்டகாசங்கள்

பண்டாசுரன் மூன்று உலகங்களேயும் வென்று, இந்திரன் முதலான தேவர்களையெல்லாம் தன் அடிமைகளாக்கிக் கொண்டான். இதைக் கண்டு மகிழ்ச்சி அடைந்த தாரகன் என்னும் அசுரன், தன்னுடைய நான்கு தங்கைகளேயும், பதினெட்டு அண்டங்களின் ஆதிபத்தியத்தையும், பண்டனுக்குப் பரிசாக அளித்தான்.

இந்திரன், அக்கினி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் இந்த எட்டுப் பேரும் எட்டுதிசைகளில் ஆட்சி புரிபவர்கள். இவர்களுக்கு திக்பாலர்கள் என்று பெயர். இவர்கள் அனைவரையும் அந்தப்பதவிகளிலிருந்து நீக்கி விட்டு, உக்ரகர்மா முதலான எட்டு அசுரர்களை திக்பாலர்களாக நியமித்தான் பண்டாசுரன். அதன் பிறகு, பிரம்மா, விஷ்ணு, உருத்திரன் ஆகிய மும் மூர்த்திகள் மீதும் அவன் படையெடுத்துச் சென்றுன்.

கயிலாயத்தில் அவன் கணேசப்ரபுவைக் கண்டான், அவரே தன்னை உருவாக்கிய பெருமான் என்பதையும், இளமைக்காலத்தில் தன்னுடைய விளையாட்டுத் தோழராக இருந்தவர் என்பதையும் மறந்துவிட்டு, அவரை அவன் மிகவும் இழிவாகப் பேசினுன். உடனே அவ்விருவருக்கும் கடும்போர் மூண்டது அந்தப் போரிலே, எவராலும் வெல்லுதற்கரிய விநாயகப் பெருமானை, தன்னுடை அங்குசத்தாலே அடித்து வீழ்த்தினுன் பண்டாசுரன்.

அதைக்கண்டு அளவற்ற சீற்றம் அடைந்தவளாய், அவனைப் பார்த்து ''ஹூம்'' என்று அதட்டினுள் அன்னை பார்வதி. அந்த ஒரு சப்தத்தினுலேயே, மந்திரத்தால் கட்டப்பட்ட சர்ப்பத்தைப் போல அவன் சக்தி இழந்து வீழ்ந்தான். அடுத்தபடியாக, அவள் அவனுடைய உயிரை வாங்கப் போகும் தருணத்தில், அங்கு பிரம்மா வந்து சேர்ந்தார்.

''தாயே! சங்கரன் கொடுத்த வரத்தை தயவுசெய்து நினைவு கூருங்கள். அந்த வரத்தின் படி, தாங்கள் இவனைக் கொல்லக் கூடாது!'' என்று அன்னையிடம் விண்ணப்பித்துக் கொண்டார். அம்பிகையும் கோபம் தணிந்து, அவனைக் கொல்லாது விடுத்தாள். எனினும், ''இனிமேல் நீ இந்தக் கயிலைக்கு வருவாயாளுல், நாசமாகி விடுவாய்!'' என்று அவனுக்குச் சாபம் கொடுத்து அனுப்பினுள்.

## தேவர்களின் துயரங்கள்

பண்டாசுரனும் சூன்யகபுரம் என்னும் தன்னுடைய தலை நகருக்குத் திரும்பி வந்து சேர்ந்தான். அங்கிருந்தபடியே அவன் ஐந்நூறு பிரமமாண்டங்களுக்கும் ஏக சக்ராதிபதியாக ஆட்சி செலுத்தி வந்தான். அவனுடைய பிரதிநிதிகளாக விசுக்ரன் என்பவன் பூலோகத்தையும், விஷங்கன் என்பவன் பாதாள லோகத்தையும் பரிபாலித்து வந்தனர். இந்திரன் முதலான தேவர்களும், திக்பாலர்ளும், அசுரர்களின் ஏவலாட்களாகப் பணிபுரிந்து வந்தனர். இந்திராணிமட்டும் பண்டாசுரன் கையில் அகப்படாமல் தப்பிச்சென்று, பார்வதிதேவியை சரணடைந்து, அவளுடைய பாதுகாப்பில் இருந்து வந்தாள்.

இந்த நிலையில், அசுர குருவாகிய சுக்ர பகவான் இந்திராதி தேவர்கள் மீது இரக்கம் கொண்டு, அவர்களது அடிமைத்தளையை அகற்றி விடுதலை செய்யுமாறு பண்டாசுரனைக் கேட்டுக்கொண்டார். பண்டனும் அவ்வாறே அவர்களை விடுதலை செய்தான். தேவர்கள் தமக்குப் போக்கிடம் இன்றி அங்கும் இங்கும் அலைந்து கொண்டு இருந்தனர். அதுமட்டும் அன்று; மறுபடியும் அசுரர்களின் கண்ணில் பட்டால் என்ன என்ன கொடுமைகளுக்கு ஆளாக நேருமோ என்று அஞ்சியவர்களாய், அவர்கள் தலைமறைவாகவே வாழ்ந்து கொண்டிருந்தனர்.

இவ்வாறாக இருபது லட்சம் ஆண்டுகள் கழிந்தன.

இருபது லட்சம் ஆண்டுகள் சொல்லாணாத் துயரங்களை அனுபவித்து வந்த இந்திரன், அதற்கு மேலும் அனுபவிக்க ஆற்றாதவனாய், தேவகுருவாகிய பிருகஸ்பதியிடம் போய் முறையிட்டான்.

தேவகுரு இந்திரனுக்கு ஆறுதல் கூறினார். ''பண்டாசுரன் ஒழிய வேண்டுமானால், அதன் பொருட்டு ஸ்ரீஅன்னை பராசக்தியின் திருவடிகளில் சரண அடைவதைத் தவிர நமக்கு வேறு வழியே கிடையாது. ஆகையால், நாமெல்லாம் இமாசலத்துக்குப் போய், அவளை நோக்கித் தவம் செய்வோம், வாருங்கள்!'' என்றார் அவர்.

இங்கே, ''அன்னைபராசக்தி'' என்று பிருஹஸ்பதியால் குறிப்பிடப்படுபவள், கயிலாச பதியாகிய பரமசிவனின் பத்தினியாம் பார்வதிதேவி அல்லள் என்பதை நாம் தெரிந்து கொள்ளவேண்டும். அப்படியானால், அந்தப் பராசக்தி யார்? அவள் எங்கு இருக்கிறாள்?

## ஸ்ரீ நகர வர்ணனை

அநேக கோடி பிரம்மாண்டங்களுக்கு அப்பால் சுதாசிந்து என்னும் ஓர் அமிருதமயமான சமுத்திரம் இருக்கிறது. அந்த சமுத்திரத்தின் நடுவே மணித்வீபம் என்று ஒரு தீவு இருக்கிறது. தெய்விகமான தருக்கள் நிறைந்த அந்தத்தீவிலே, நானூறாயிர யோஜனை நீளமும், அதே அளவுஅகலமும் கொண்டதான ஸ்ரீநகரம் விளங்குகிறது.

முதலில், நான்கு வாயில்களை உடையதும், நாற்கோண வடிவில் அமைந்ததுமான இரும்பு மயமான கோட்டை.

அதற்குமேல் கற்பகத்தருக்கள் மலிந்த வெண்கல மயமான கோட்டை.

அந்தக் கோட்டையில், ஐந்து ஆவரணங்களோடு கூடிய சிம்மாசனத்தில், மஹாகாளர் தன் பரிவாரங்கள் புடை சூழ விளங்குகிறார்.

அதற்கு மேல் தாமிர மயமான கோட்டையில், மது சக்தி, மாதவசக்தி யென்னும் இரண்டு சக்திகளுடன், வசந்தருது தேவதை விளங்குகிறது.

அதற்குமேல் ஈயமயமான கோட்டையில் சந்தான மரச்சோலையின் மத்தியிலே, சுக்ரசக்தி, சுசிசக்தி யென்னும் இரண்டு சக்திகளுடன், கிரீஷ்மருது தேவதை விளங்குகிறது.

அதற்குமேல் பித்தளைமயமான கோட்டையில், ஹரிசந்தன மரச்சோலையின் மத்தியிலே, நபசக்தி, நபஸ்யாசக்தி யெனனும் இரண்டு சக்திகளுடன், வருஷருது தேவதை விளங்குகிறது.

அதற்குமேல் பஞ்ச லோஹ மயமான கோட்டையில் மந்தார மரச் சோலையின் மத்தியில் இஷாசக்தி, உர்ஜசக்தி என்னும் இரண்டு சக்திகளுடன் சரத்ருது தேவதை விளங்குகிறது.

அதற்குமேல் வெள்ளி மயமான கோட்டையில், பாரிஜாத மரச் சோலையின் மத்தியிலே ஸஹசக்தி ஸஹஸ்யாசக்தி என்னும் இரண்டு சக்திகளுடன் ஹேமந்தருது தேவதை விளங்குகிறது.

அதற்குமேல் தங்கமயமான கோட்டையில் கதம்ப மரச் சோலையின் மத்தியிலே, தபசக்தி தபஸ்யாசக்தியென்னும் இரு சக்திகளுடன் சிசிரருது தேவதை விளங்குகிறது.

அந்தக் கதம்பமரச் சோலையில், மந்திரிணீதேவி தன் எட்டு சக்திகளுடன் விளங்குகிறாள்.

அதற்குமேல் புஷ்பராக மயமான கோட்டையில் சித்தர்கள் வசிக்கிறார்கள்.

அதற்குமேல் பத்மராக மயமான கோட்டையிலே சாரணர்கள் தங்கள் சக்திகளுடன் வசிக்கிறார்கள்.

அதற்குமேல் கோமேதக மயமான கோட்டையிலே, கால ஸங்கர்ஷிணீ யென்னும் தேவி அநேக பைரவர்களுடன் வீற்றிருக்கிறாள்.

அதற்குமேல் வஜ்ரமயமான கோட்டையிலே, வஜ்ரா என்னும் நதி ஓடுகிறது. அங்கு வஜ்ரேஸ்வரி தேவி வீற்றிருக்கிறாள்.

அதற்குமேல் வைடூர்ய மயமான கோட்டையிலே நாகங்கள் வாழ்கின்றனர்.

அதற்குமேல் இந்திர நீலமயமான கோட்டையிலே, மனிதர்கள் வாழ்கின்றனர்.

அதற்குமேல் முத்து மயமான கோட்டையிலே திக்பாலர்கள் வசிக்கின்றனர்.

அதற்குமேல் மரகத மயமான கோட்டையிலே, ஸ்ரீதண்டனீ தேவி தன் பரிவாரங்களுடன் வீற்றிருக்கிருள்

அதற்குமேல் பவளக் கோட்டையிலே பலமுனிவர்களும் யோகியர்களும் வாழ்கின்றனர்.

அதற்குமேல் நவரத்னமயமான கோட்டையிலே, ஸ்ரீமஹா விஷ்ணு தன்பரிவாரங்களுடன் வீற்றிருக்கிருர்.

அதற்குமேல் நானுரத்னமயமான கோட்டையிலே, ஸ்ரீபரமேஸ்வரன் தன் பரிவாரங்களுடன் வீற்றிருக்கிருர்.

அதற்குமேல்,அருண வர்ணமான மனேமயக் கோட்டேயிலே, அமிருதவாபியினிடத்தே ஸ்ரீதாராதேவி நவரத்னமயமான தோணியில் அமர்ந்திருக்கிருள்.

அதற்கு மேல் புத்திமயமான கோட்டையிலே, ஆனந்த வாபியினிடத்தே ஸ்ரீ அம்ருதேசீதேவி தன்னுடைய தோணியில் அமர்ந்திருக்கிருள்.

அதற்கு மேல் அஹங்கார மயமான கோட்டையிலே, விமர்ச வாபியினிடத்தே, ஸ்ரீகுருகுள்ளாதேவி தன்னுடைய தோணியில் அமர்ந்திருக்கிருள்.

அதற்குமேல் சூர்யமயமான கோட்டையிலே, தாமரைப்பூவில் பன்னிரண்டு பேதங்களான மித்திரன் முதலானவர்களுடன், சூர்யன் அமர்ந்திருக்கிருர்.

அதற்கு மேல் சந்திரமயமான கோட்டையிலே, அமிருத மயமான கிரணங்கனே வீசிக் கொண்டு சந்திரன் அமர்ந்திருக்கிருர்.

அதற்கு மேல் கௌஸ்துபமணி மயமான சிருங்காரக்கோட்டையிலே, ரதிதேவி, ப்ரீதிதேவியென்னும் இரண்டு சக்திகளுடன், மன்மதன் வீற்றிருக்கிருன்.

அதற்குமேல் மஹாபத்மவனம் என்னும் தாமரைக்காடு இருக்கிறது.

அந்த மஹாபத்மவனத்தின் மத்தியிலே, சிந்தாமணிமயமான மாளிகையில் ஸ்ரீதேவி பராசக்தி கொலுவீற்றிருக்கிருள்.

இந்த நிலையில் அவளுக்கு ஸ்ரீதிரிபுராதேவி அல்லது ஸ்ரீமஹாதிரிபுரசுந்தரி என்ற தி ப்பெயர்கள், தந்திர சாஸ்திரங்களிலே வழங்கப்பட்டுள்ளன. இத்தகைய பரதேவதையை நோக்கித்தவம்

செய்யுமாறு இந்திராதி தேவர்களுக்கும், பிரம்மா, விஷ்ணு, உருத்திரன் ஆகியமும்மூர்த்திகளுளும், தேவகுருவாகிய பிருகஸ்பதி யோசனே கூறினர். அந்த யோசனேப்படியே அவர்கள் எல்லாரும் இமயமலேயை அடைந்து, அங்கு நூறுண்டுகாலம் கடுந்தவம் புரிந்தார்கள். அதன் பிறகு அவர்கள் மஹாயாகம் என்னும் ஒரு பெரிய யாகத்தைத் தொடங்கினர்கள்.

ஸ்ரீதிரிபுராதேவிதோன்றி மறைதல்

யாகம் முடிந்து பூர்ணுஹுதி செய்து, எல்லாரும், ஸ்ரீதிரிபுராதேவியை ஸ்தோத்திரம் செய்துகொண்டிருக்கும்போது, யாககுண்டத்தின் மத்தியில், உலகையே நடுநடுங்கச் செய்யும் ஒருபேரொலி எழுந்தது. அந்த சப்தத்தைக் கேட்டதும், பிருகஸ்பதியைத் தவிர மற்ற தேவர்களும் மூவர்களும் மூர்ச்சையுற்று வீழ்த்தார்கள். அதே சமயத்தில், யாகாக்கினியின் ஜ்வாலே மிகவும் பிரகாசம் அடைந்தது. அந்தஜ்வாலேயிலிருந்து ஸ்ரீதிரிபுராதேவி வெளிப்பட்டு விளங்கினுள்.

கோடி இளஞ்சூரியர்கள் ஒருங்கே உதித்தாற்போன்ற பேரொளியும், பூர்ணசந்திரனேப்போல் பொலிவுற்று விளங்கும் மூகமண்டலமும், பாசம் அங்குசம் முதலிய ஆயுதங்கள் விளங்கும் நான்கு திருக்கரங்களும் கொண்டு ஆவிர்பவித்த அந்தத் திரிபுரா தேவியை, மூர்ச்சை தெளிந்து எழுந்த மும்மூர்த்திகளும் பிருகஸ்பதியும் தாளில் வீழ்ந்து வணங்கி, ஆனந்த ப்ரவசர்களாகி ஸ்தோத்திரம் செய்தார்கள்.

அவர்களுடைய பக்திப் பெருக்கைக் கண்டு உவகையுற்ற திரிபுரா தேவி, ''உங்கள் கோரிக்கை என்ன, கூறுங்கள்!'' என்று உத்தரவிட்டாள்.

''தாயே, நீ பண்டாசுரனே சம்மாரம் செய்யவேண்டும்!'' என்று வேண்டினர்கள் திரிமூர்த்திகள்.

தேவி அவர்கள் விருப்பப்படியே அவனே சம்மாரம் செய்து தேவர்களேக் காப்பாற்றுவதாக வாக்களித்தாள்.

இதைக் கேட்டதும் திரிமூர்த்திகளும் தேவகுருவும் அளவிலா ஆனந்தம்அடைந்தனர். நினேவு இழந்து கிடக்கும் இந்திராதி தேவர்க்கும், தேவி தன்னுடைய திவ்யரூப தரிசனம் தந்தருள வேண்டும் என்று அவர்கள் பிரார்த்தித்தனர்.

ஆனல் தேவி அதற்கு இணங்கவில்லே.

''இந்த என் ஸ்வரூபத்தைத் தரிசனம் செய்வதற்கு உரிய யோக்யதை, இந்திராதி தேவர்களுக்குக் கிடையாது. அந்த யோக்யதையை அவர்கள் பெறவேண்டுமானல், அதற்கென்று அவர்கள் தனியாகத் தவம் செய்ய வேண்டும்!'' என்று கூறிய திரிபுராதேவி, தன்னுடைய அம்ருதமயமான பார்வையினல் இந்திராதி தேவர்களின் மூர்ச்சையைத் தெளிவித்து விட்டு, அவர்கள் கண்ணில் படாமலே மறைந்து போயினுள்.

நினைவுபெற்றெழுந்த இந்திராதி தேவர்கள் நடைபெற்ற செய்திகளைக் கேட்டுத் தாங்கொணுக்களிப்படைந்தனர். பின்னர் ஸ்ரீ தேவியின் தரிசனத்தைத் தாமும் பெறவேண்டும் என்ற இச்சையினுல், பதிஞேரு மாதகாலம் அவளைச் சிறப்பாக ஆராதனை செய்தனர்,

### அம்பிகை அமைத்துக் கொடுத்த அக்கினிக் கோட்டை

இந்தச் சமயத்தில், அசுர குருவான சுக்கிரபகவான் பண்டாசுரனிடம் சென்று, ''தேவர்கள் ஸ்ரீதிரிபுரா தேவியை ஆராதனம் செய்கிருர்கள். ஆகையால், உன்னை நீ காப்பாற்றிக் கொள்ளவேண்டுமாயின், சுவர்க்க லோகத்தைத் தேவர்களிடம் திருப்பிக் கொடுத்துவிட்டு, நீயும் அந்தத் திரிபுராதேவியை ஆராதனம் செய்யவேண்டும்'' என்று அறிவுரை கூறினர்.

இதைக் கேட்டதும், பண்டாசுரன் தன் மந்திரி சபையைக் கூட்டி ஆலோசனை நடத்தினன். அந்த ஆலோசனையின் முடிவில், தேவர்களோடு போர் தொடுத்து அவர்களை தண்டித்து அடக்குவது என்று தீர்மானிக்கப்பட்டது. அதன்படியே, அவன் தன் படைகளைத் திரட்டிக் கொண்டு, தவம் செய்துகொண்டிருக்கும் தேவர்கள் மீது போருக்குப் புறப்பட்டான்.

கோடிக் கணக்கான சைன்யங்களுடன் பண்டாசுரள் வந்து கொண்டிருப்பதை அறிந்து பயந்து நடுங்கினர் இந்திராதி தேவர்கள், பண்டாசுரனிடம பிடிபட்டுச் சித்திரவதைக்கு உள்ளாவதைவிட, தேவியினுடைய ஹோமகுண்டத்திலேயே தம் உடல் உறுப்புக்களைத் தியாகம் செய்வது மேலானது என்று அவர்சள் தீர்மானித்தார்கள். அவ்வாறே தம்முடைய கைகள் கால்கள் முதலான அங்கங்களை ஒவ்வொன்ருக வெட்டி அக்கினி குண்டத்தில் போட்டு ஹோமம் செய்தார்கள்.

உடனே ஸ்ரீ திரிபுரா தேவி தன்னுடைய பரிவார தேவதையான ஜ்வாலா மாலினிக்குக் கட்டளையிட, அந்த ஜ்வாலா மாலினியும் தேவர்களைச் சுற்றி ஒரு பெரிய அக்கினிக் கோட்டையாக நின்று அவர்களுக்குக் காவல் புரியலானுள்.

அதைக் கண்ட பண்டாசுரன், தேவர்கள் ஏதோ ஒரு பெரிய காட்டுத்தீயில் சிக்கி எரிந்து போய்விட்டார்கள் என்று எண்ணிக்கொண்டு, தன் சைன்யங்களுடன் திரும்பிச் சென்றுவிட்டான்.

### ஸ்ரீ லலிதாம்பிகையின் ஆவிர்பாவம்

பிறகு தேவர்களும் ஸ்ரீ திரிபுரா தேவிக்குத் தம் சரீரங்களைப் பூர்ணுஹுதியாகக் கொடுத்து விடுவதென்று தீர்மானித்தனர். அவ்வாறு செய்வதற்கு அவர்கள் முற்பட்ட சமயத்தில், அவர்களைக் காப்பாற்றுவதற்காக சிதக்னிகுண்டம் என்ற அந்த ஹோமகுண்டத்தின் அக்னி ஜ்வாலைகளிலிருந்து, அநேக கோடி மின்னல் கொடிகள் ஒன்று திரண்டு ஒரு பெண்ணுருவாயினுற்

போன்ற எழிற்கோலத்துடன், ஸ்ரீ தேவியே அங்கு ஆவிர்பவித்தாள்.

அவளே ஸ்ரீ காமாட்சி எனப்படுகிற லலிதாம்பிகை ஆவாள்

அவளுடைய கிடைத்தற்கரிய தரிசனம் கிடைக்கப் பெற்று, தேவர்களும் மூவர்களும் ''ஜயஜய!'' வென்று ஜெய்கோஷம் எழுப்பினுர்கள். ஸ்ரீ தேவியும், ஹோமகுண்டலத்தில் தனக்கு ஹவிஸாக அர்ப்பணிக்கப்பட்ட கைகள் கால்கள் முதலிய அங்கங்களையெல்லாம் தேவர்கள் மீண்டும் பெற்று, அவர்கள் முன் போலவே பூர்ணசரீரம் உடையவர்களாய் விளங்குமாறு திருவருள் புரிந்தாள்.

அப்போது, ''தாயே, எல்லா பிரம்மாண்டங்களுக்கும் அப்பாற்பட்ட அமிருத சாகரத்தின் கண்ணே, இரத்தினத்தீவின் நடுவே உள்ள சிந்தாமணி கிருஹத்தில் நீ கொலுவீற்றிருப்பவள். நியதி தத்துவத்தைக் கடந்த மகாஞானிகளால் மட்டுமே அந்த இடத்துக்கு வந்து உன்னைத் தரிசனம் பண்ணமுடியும். அப்படிக்கு இன்றி, எம்போன்றவர்களும் எளிதில் வந்து உன்னைத் தரிசனம் செய்யுமாறு, இந்த மகாமேரு பர்வதத்தின் நடுவிலேநீ கோயில் கொண்டருளவேண்டும்'' என்று ஸ்ரீ திரிபுரா தேவியை பிரார்த்தித்தனர் திரிமூர்த்திகள்.

அவர்களுடைய பிரார்த்தனைக்கு இரங்கி, தேவியும் அவ்வாறே சம்மதித்தாள். அவள் கோயில் கொண்டருளுவதற்கான ஸ்ரீபுரம் என்னும் நகரத்தை நிர்மாணிக்குமாறு, பிரம்மதேவர் விஸ்வகர்மாவுக்குக் கட்டளையிட்டார். நானூறுயோஜனை விஸ்தீரணம் உள்ளதான, மகாமேருவின் நடுவே உள்ள கொடுமுடிதான் ஸ்ரீபுரத்தை நிர்ணயிப்பதற்குத் தகுதியான இடம் என்று தேர்ந்தெடுக்கப்பட்டது. அதை எந்தவிதம் நிர்மாணம் செய்யவேண்டும் என்ற விவரங்களை யெல்லாம் பிரம்மதேவர் விஸ்வகர்மாவிற்கு விளக்கிக் கூற, அவரும் அவ்வாறே அதை நிர்மாணம் செய்யலானுர்.

## 3. பண்டாசுர வதம்

இதற்கிடையில் ஒருநாள், பண்டாசுரனைப் பார்ப்பதற்காக நாரதர் அவனுடைய அரண்மனைக்கு வந்து சேர்ந்தார்.

பண்டாசுரன் அவரை வணங்கி வரவேற்று, தான் தேவர்களைக் கொல்வதற்காகச் சென்றதும், அதற்கு முன்னமேயே அவர்கள் காட்டுத்தீயில் அகப்பட்டு இறந்துவிட்டதுமான செய்திகளைக் கூறினுன்.

அவற்றைக் கேட்டுச் சிரித்தார் நாரதர்.

''பண்டாசுரா! உனக்கு உண்மை தெரியாது. நீ நினைக்கிற மாதிரி, தேவர்கள் தீயில் சிக்கி இறந்துபோய் விடவில்லை.

அவர்கள் உன்னைக் கொல்வதற்காக ஒரு மஹாயாகம் செய்தார்கள். அந்த அக்கினி குண்டத்திலிருந்து, ஸ்ரீ லலிதாதேவி ஆவிர்பாவம் அடைந்திருக்கிருள்'' என்று நடந்த செய்திகளையெல்லாம் விளக்கிக் கூறினுர் நாரதர்.

அதற்கு பண்டாசுரன், ''நாரதரே! என்னுடைய ஆற்றல் எத்தகையது என்பதுஅவர்களுக்குத் தெரியாது. நான் விஷ்ணுவையே ஜெயித்தவன். அப்படியிருக்க, ஓர் அபலையான ஸ்திரீயினுல் என்னை என்ன செய்ய முடியும்?'' என்ருன்.

அந்த சமயத்தில் பண்டாசுரனுடைய மனைவியர் வந்து நாரதரை வணங்கி ''எங்கள் கணவர் மரணம் அடையாமல் எங்களுடைய மாங்கல்யம் நீடித்திருக்கும்படியாக ஒரு மார்க்கம் சொல்ல வேண்டும்'' என்று கேட்டுக் கொண்டார்கள்.

நாரதர் கூறினுர்: ''முற்காலத்தில் மதுகைடபர்கள், சண்டமுண்டர்கள், சும்ப நிசும்பர்கள் முதலான பல அசுரர்கள் சண்டிகா என்னும் ஒரு ஸ்திரீயினுல்தான் நாசம் அடைந்தார்கள். இப்போது சிதக்னிகுண்டத்திலிருந்து ஆவிர்பவித்திருக்கும் லலிதாம்பிகையும் ஒரு சாமான்யமான ஸ்திரீ அல்லள். பண்டாசுரனுல் அவளை ஒருநாளும் ஜெயிக்க முடியாது. ஆகையால் அவளுடைய திருவடிகளில் அடைக்கலம் புகுந்து, அவளது கருணைக்குப் பாத்திரமாவதுதான் நேரான மார்க்கம்.''

நாரதர் இப்படிக் கூறியவுடன், பண்டாசுரன் அவரைத் தன்னுடைய ஏகாந்தமான உப்பரிகைக்கு அழைத்துச் சென்ருன்.

அங்கு அவன் சிரித்துக் கொண்டே சொன்னுன்:

''முனிவர் பெருமானே! நான் தங்களுடைய சிஷ்யன். தாங்கள் கூறுவது எவ்வளவு உண்மையான வார்த்தைகள் என்பது எனக்குத் தெரியும். இருந்தாலும், நான் இப்போது அந்த லலிதாம்பிகையிடம் போய் சரணடைய முடியாது. அவளோடு நான் போர் செய்தே தீரவேண்டும். ஏனென்ருல்,—

பண்டாசுரனின் முற்பிறவி வரலாறு.

''இதற்கு முந்தின பிறப்பில் நான் லக்ஷ்மீதேவியின் தூதனுக இருந்தவன். அப்போது என் பெயர் மணிசேகரன். ஒரு நாள் கங்கையின் வெள்ளத்திலே ஒருகின்னர ஸ்திரீ அடித்துச் செல்லப் படுவதை நான் காண நேர்ந்தது. உடனே நான் அவள் மீது இரக்கப்பட்டு,அவளை அந்த வெள்ளத்திலிருந்து காப்பாற்றினேன். அந்தச் சமயத்தில், அவளுடைய யௌவனத்தைக் கண்டு நான் காமபரவசனுகி, அவளை மருவி மகிழ்வதற்கு ஆசைப் பட்டேன்.

''ஆனுல், அவள் அதற்கு உடன்படவில்லை, அவளை நான் ஆபத்திலிருந்து காப்பாற்றியதால், நான் அவளுடைய தந்தைக் குச் சமானம் ஆகிவிட்டேன் என்று வாதாடினுள். அவளுடைய அந்த வாதத்தை ஒப்புக்கொள்ளாத நான், அவளைப் பலாத் காரம் செய்ய முற்பட்டேன். உடனே அவள் பயந்து நடுங்கிக் கதறிக் கொண்டு ஓடி, லக்ஷ்மீ தேவியைச் சரணடைந்தாள்.

"என்னுடைய செய்கையைக் கேட்டு லக்ஷ்மீ தேவி சினம் அடைந்தாள். ஒரு பெண்ணை பலாத்காரம் செய்வது அசுரத் தனமான காரியமாகையால், நான் அசுரனுக பவிக்குமாறு சாபம் கொடுத்தாள்.

''நான் என் தவற்றை உணர்ந்து வருந்தி, எனக்குச் சாப விமோசனம் அருளுமாறு பிரார்த்தித்தேன்.

''அப்போது லக்ஷ்மீதேவி,'நீ அசுரனுகப் பிறந்தாலும், அநேக பிரம்மாண்டங்களுக்கு அதிபதியாகி நீ ஆசைப்பட்ட போகங்களையெல்லாம் அனுபவித்து, இறுதியில் ஸ்ரீதிரிபுராதேவி யால் மரணம் அடைந்து, அவளது சாயுஜ்ய பதவியைப் பெறு வாயாக!' என்று அனுக்கிரகம் செய்தாள்.

''அந்தத்திரிபுராதேவி யார் என்று நான் லக்ஷ்மீ தேவியைக் கேட்க 'அவள் எல்லாவற்றிற்கும் மேம்பட்டவள். சித்ஸ்வரூபிணி. வாக்குக்கும் மனத்துக்கும் எட்டாத பெருமை படைத்தவள். பிரம்மா, விஷ்ணு, உருத்திரன் என்ற மும் மூர்த்திகளும் அவளுக்குக் கீழ்ப்பட்டவர்களே! அவள்தான் சகல அண்டபிண்ட சராசரங்களையும் இயக்கிக் கொண்டு இருப்பவள். அவள் இல்லா விட்டால், இந்தப் பிரபஞ்சமே இல்லை காளி, லட்சுமீ, சரஸ்வதி ஆகிய நாங்கள் எல்லாரும், அந்தத்திரிபுராதேவியின் அம்சங்களே அன்றி வேறு அல்லர். இந்த ஜகத்தை இரட்சிப்பதற்காக, அவள் ஒவ்வொரு சமயங்களில் ஒவ்வொரு விதமான உருவத்தை எடுத்துக் கொள்கிருள். அத்தகைய திரிபுராதேவியின் பூரணும்சமாக, ஸ்ரீலலிதா தேவி ஆவிர்பாவம் செய்யப்போகிருள். அவளால்தான் உனக்கு மரணம் ஏற்படப் போகிறது' என்றுள் லக்ஷ்மீதேவி.

''உடனே நான் அந்த லக்ஷ்மீதேவியை நமஸ்கரித்து, 'தாயே நான் அசுரப்பிறவியை அடைந்தாலும், எனக்குக் கர்ப்பவாசம் ஏற்படக்கூடாது. நான் யோனிமார்க்கமாகப் பிறக்கக்கூடாது. அதற்குப் பதிலாக, அந்தப் பராசக்தியின் உத்தமமான பக்தன் ஒருவனுடைய சரீரத்திலிருந்து, எனக்குப் பிறப்பு ஏற்படவேண்டும். அதுமட்டுமல்ல. நான் அசுரனுகப் பிறந்து வாழ்ந்துகொண் டிருக்கும்போதே, என்னுடைய அறிவில் பூர்வ ஜென்ம ஞாபகம் எப்போதும் இருந்து கொண்டேயிருக்கவேண்டும்!' என்று பிரார்த் தித்துக்கொண்டேன்.

''ஸ்ரீலக்ஷ்மீதேவியும் என்னுடைய பிரார்த்தனைக்கு இரங்கி' 'அவ்விதமே ஆகட்டும்' என்று அனுக்கிரகம் செய்தாள்.

''ஆகையால் இப்போது நான் எப்படி அந்த லலிதாம்பிகை யோடு போர் புரியாமல் தப்ப முடியும்? லக்ஷ்மீதேவி எனக்கு அருள் புரிந்தாவறே, இது வரையில் நான் எல்லாவிதமான போகங்களை யும் அனுபவித்து முடித்துவிட்டேன். இனிமேல், என்னை அண்டி யிருக்கிற அசுரகுலத்தினர் அனைவரையும் அந்த லலிதாம்பிகையின் கையாலேயே முக்தி அடையச் செய்து, இறுதியில் நானும் இந்த சரீரத்தைவிட்டு, அவளுடைய திவ்யதிருவடிகளைச் சேர்ந்துவிட எண்ணியிருக்கிறேன்!''

இவ்வாறு பண்டாசுரன் கூறியதைக் கேட்டு, பெருவியப்பும் பேரானந்தமும் அடைந்தார் நாரதமகரிஷி.

பின்னர் அவர் பண்டாசுரனுடைய பத்தினிகளைச் சந்தித்து' அவர்களுக்குச் சில சமாதானமான வார்த்தைகளைக் கூறிவிட்டு, அங்கிருந்து புறப்பட்டுச் சென்முர்.

### அம்பிகையின் போர்க்கோலம்.

இங்கு இப்படி இருக்க, சிதக்னிகுண்டத்திலிருந்து ஆவிர்பவித்த ஸ்ரீலலிதாதேவியைப் பார்த்து, தேவர்களும் மூவர்களும் ஒரு விண்ணப்பம் செய்து கொண்டார்கள்.

''தாயே! சகல ஸௌபாக்கியங்களுக்கும் நிலைக்களனுய்'' நித்திய யௌவனசுந்தரியாய் விளங்குகிற தாங்கள்இப்படித்தனியே இராமல், தங்களுக்குப் பொருத்தமான ஒரு மணமகனேடு எங்களுக்குத் திருமணக்கோலம் காட்டியருளவேண்டும்!'' என்று அவர்கள் பிரார்த்தித்தார்கள்.

அவர்களது ஆசையை நினைத்துக் குறுநகை புரிந்தவாறே, அம்பிகை தனக்குள் ஐக்கியமாகி இருக்கும் காமேஸ்வரனை வெளிப் பட்டு விளங்குமாறு சங்கற்பித்தாள். உடனே, அந்தப்பரதேவதை யின் உடலிலிருந்து, கோடி மன்மதர்களின் அழகு ஒருங்கே திரண்டு உருவாயினுற் போன்ற தோற்றத்துடன், நிர்குண பரசிவமாகிய காமேஸ்வரன் ஆவிர்பவித்தார். அவ்விருவரும் அமர்ந்திருந்த காட்சியைக்கண்டு, இந்திராதி தேவர்களும், பிரம்மாதி மூவர்களும் எல்லையில்லாத ஆனந்தக்கடலில் ஆழ்ந்து திளைத்தனர். அவ்விரு வருக்கும் மிக விமர்சையாகத் திருமணம் நடந்தேறியது.

இனி, பண்டாசுரனை வதம் செய்வதற்கான ஆயத்தங்களில் ஈடுபடவேண்டும் என்று எண்ணினுள் பரதேவதை. அவளுடைய சங்கற்ப மாத்திரத்தில், கோடானுகோடி சக்திகள் தோன்றி, ஒரு மாபெரும் சைன்யமாக அவளைப் புடைசூழ்ந்தார்கள். அந்த சைன்யங்களுக்கு எல்லாம் தலைவியாக, தண்டநாதா எனப் படுகிற மஹா வாராஹி விளங்கினுள். அதேபோல் ராஜ மாதங் கீஸ்வரி எனப்படுகிற ராஜ சியாமளா தேவி, அம்பிகையின் மந்த்ரிணியாக(அதாவது,அமைச்சராக)த் தோன்றி, அவளது அரு கில் வந்து அடிபணிந்தாள். அப்படியே யானைக்கூட்டங்களுக்குத் தலைவியாக ஸம்பத்கரீ என்ற மஹாசக்தியும், குதிரைக்கூட்டங் களுக்குத் தலைவியாக அஸ்வாரூடா என்ற மஹாசக்தியும் தோன்றி, தத்தம் பரிவாரங்களோடு காட்சியளித்தார்கள். அதே சமயத் தில், ஸ்ரீ லலிதாதேவியின் ஓர் அம்சமாக உள்ள பாலாம்பிகையும், ஒரு சிறுபெண் வடிவத்தில் அங்கு காட்சி தந்து அருளினுள்.

அப்போது நாரதர் அங்கு வந்து, பண்டாசுரன் யுத்தத்திற் காகப் புறப்பட்டு வருகிற செய்தியைக் கூறினுர். உடனே சக்ர ராஜம் என்னும் பெயர் கொண்டதும், ஒன்பது தட்டுக்களோடு அமைந்ததுமான ஒரு மஹாரதத்தில், அம்பிகை தன் கணவராகிய காமேஸ்வரனேடு ஏறி அமர்ந்தாள். அதேபோல், கேயச் சக்கரம் என்ற ரதத்திலே மாதங்கீஸ்வரியும், கிரிச்சக்கரம் என்ற ரதத்திலே

மஹா வாராஹியும் ஏறி அமர்ந்தனர். அவ்வாறே நித்யா தேவதைகள், பாலாம்பிகை போன்றவர்களும் தத்தம் ஊர்திகளிலே ஆரோகணிக்க, தேவர்களும் மூவர்களும், முனிவர்கள், சித்தர்கள், வித்யாதரர்கள், யக்ஷர்கள், கின்னரர்கள், கிம்புருடர்கள், கந்தர் வர்கள் ஆகியோரும் வாழ்த்தொலி இசைக்க, வாத்யங்கள் முழங்க, பண்டாசுரன் மீது போருக்கு எழுந்தாள் ஸ்ரீ திரிபுராதேவியாகிய லலிதா மஹாதிரிபுரசுந்தரி.

## பண்டாசுரனின் களிப்பும் கவலையும்.

அம்பிகையின் இந்தப் படையெழுச்சியைக்கேட்டு, உள்ளூற அளவில்லா ஆனந்தம் அடைந்தான் பண்டாசுரன். தன்னுடைய முற்பிறவியில் மஹாலக்ஷ்மியால் அளிக்கப்பட்ட சாபம் நீங்கும் நாள் நெருங்கிவிட்டது என்று, அவன் உள்ளம் பூரித்தது. ஸ்ரீ லலிதாம்பிகையின் திருக்கரத்தால் தன்னுடைய அசுரப்பிறவி ஒழிந்து, இனி என்றுமே பிறவாத பேரின்பப் பெரு வாழ்வை அடையப் போகிறோம் என்ற உணர்விலே, அவனது அகமும் முகமும் குதூகலத்தோடு விளங்கின. ஆனால் அதே சமயத்தில், அவனுக்கு இன்னொரு கவலையும் ஏற்பட்டது.

அதாவது, ''நாம் ஒருவன்மட்டும் நற்கதி அடைந்தால், நம்மை நம்பி உள்ள இந்த அசுரக்கூட்டங்கள் அனைத்தும் என்ன கதி ஆவது? நமக்குப் பின்னால் அவர்கள் தேவர்கள் கையிலே சிக்குண்டு சீரழிவுகளுக்கு ஆளாகி விடக்கூடாதே! அதைவிட, அவர்களையெல்லாம் முதலில் மடிந்து ஒழியவிட்டு, கடைசியாக நாம் இறப்பதுதான் நலமாய் இருக்கும். அம்பிகையின் அம்சங் களாகிய பாலை, மாதங்கீஸ்வரி, மஹாவாராஹி போன்ற மஹா சக்திகள் கரத்தால் நம்முடைய குலத்தவர்கள் அழிக்கப்படும் போது, அவர்களும் உயர்ந்த பரகதியையே அடைவார்கள் என்பதில் ஐயமில்லை. ஆகவே நம்முடைய குமாரர்களையும், தம்பி மார்களையும், மற்றைய சுற்றத்தாரையும் முதலில் போருக்கு அனுப்பிவிட்டு, ஸ்ரீ லலிதாம்பிகையை நாம் கடைசியாகத்தான் சந்திக்க வேண்டும்!'' என்று அவன் தனக்குள்ளே தீர்மானித்துக் கொண்டான்.

அவனுடைய எண்ணப்படியே, பாலாம்பிகையோடு போரிட்டு பண்டகுமாரர்கள் அனைவரும் அழிந்தார்கள். அவ னது கரத்திலிருந்து தோன்றிய விசுக்ரன், விஷங்கள் என்ற தம்பிமார்கள் இருவரும், முறையே வாராஹியாலும், மாதங்கி யாலும் கொல்லப்பட்டனர். கடைசியாக, தன் சுற்றமும் துணை யும் அழிந்து ஒழிந்த நிலையில், பண்டாசுரன் பராம்பிகையை நேருக்கு நேர் சந்தித்துப் போர் புரியத் தொடங்கினான்.

## அதிசயப் போரும், அசுரனின் அழிவும்

வெளிப்பார்வைக்கு அவள்மீது சினத்தைக் காட்டிய நிலையில், உள்ளத்தின் உள்ளே அவளை பக்தியோடு உருகி தியானித்தவாறு பண்டாசுரன் எடுத்த எடுப்பிலேயே ஓர் ஐந்து பாணங்களை வில்லில் தொடுத்து ஏவினான். அவற்றுள் இரண்டு பாணங்கள்

முன்னல் சென்று, அம்பிகையின் இரண்டு திருவடிகளிலும் மலர் மாரி பொழிந்தன. மூன்ருவது பாணம் தாமரைப் பூக்களால் ஆகிய ஓர் அழகான மாலையாக மாறி, அவள் கழுத்திலே போய் விழுந்தது. நான்காவது பாணம் அவளுடைய சிரசின் மீது பூமழை பொழிந்தது. ஐந்தாவது பாணம் ஓர் உயர்ந்த மாணிக்கமாக மாறி, அவளது மணிமகுடத்திலே போய்ப் பதிந்து பேரொளி பரப்பியது.

இந்தக் காட்சிஸயக் கண்டு தேவர்களும் மற்றையோரும் அளவற்ற வியப்பும் மகிழ்ச்சியும் அடைந்தனர்.

அடுத்தபடியாக, பரதேவதைக்கும் பண்டாசுரனுக்கும் பயங்கரமான போர் மூண்டது. பள்ளியில் தான் கற்ற கல்வியின் திறனையெல்லாம் வீட்டுக்கு வந்து அன்னையிடம் கூறி அவளை மகிழ்விக்கும் பாலகனைப் போன்ற மனப்பாங்கோடு. பண்டாசரன் தன்னுடைய அதிஅற்புதமான யுத்த தந்திரங்களை எல்லாம் தேவிக்குச் செய்து காட்டினன். சாதாரணமாகப் போர்களிலே பிரயோகிக்கப்படுகிற அக்கினி அஸ்திரம், வருணுஸ்திரம், வாயு அஸ்திரம் போன்ற அஸ்திரங்களைத்தவிர, பண்டைய அசுரர்குல வீரர்களான இரண்யன். இராண்யாக்ஷன், இராவணன், கும்பகர்ணன், கம்சன், சிசுபாலன், மஹாபலி மற்றும் கார்த்வீர்யார்ச்சுனன் பொன்றவர்களை யெல்லாம் தன்னுடைய ஆற்றலால் அஸ்திரங்களாக்கி, அவற்றை தேவிமீது ஏவினன் பண்டா ான், உடனே தேவி தன்னுடைய கைவிரல்கள் பத்திலிருந்தும் மச்சு, கூர்ம, வராஹ, நரசிம்ம. வாமன, பரசுராம, ஸ்ரீராம, பலராம, கிருஷ்ண, கல்கி மூர்த்திகளை உற்பன்னமாகச் செய்து, அவர்களை அஸ்திரங்களாக்கி, பண்டன் மீது ஏவினுள். இந்த அபூர்வமான யுத்த வித்தைகளைக் கண்டு தேவர்கள் எல்லாம் அதிசயித்தார்கள். கடைசியாக மஹா பாசுபதம் என்ற ஓர் அஸ்திரத்தை விடுத்து, பண்டன் ஒருவன் நீங்கலாக மற்றைய அசுரப் படைகள் அனைத்தையும் தேவி அழித்து ஒழித்தாள். பின்னர் காமேஸ்வரம் என்ற மஹா அஸ்திரம் ஒன்றை ஏவி, அவள் பண்டாசுரனையும், அவனது தலைநகராகிய சூன்யகத்தையும் நாசம் செய்தாள். இவ்வாருக பண்டாசுரவதம் முற்றுப் பெற்றது.

பண்டாசுரள் தன் குலத்தோடு ஒழிந்த குதூகலத்தினல், தேவர்களும் ஆனந்தக் கூத்தாடினர்கள்.

அந்த லலிதாம்பிகைதான் ராஜராஜேஸ்வரியென்று போற்றப்படுபவள். அவளே இன்று மாங்காட்டில் தவக்காமாட்சியாகக் காட்சியளிக்கிருள் என்பதை எண்ணும்போது, அவளை வந்து வணங்கி மகிழ்கின்ற பக்த ஜனங்களெல்லாம் எவ்வளவுபாக்கியம் பெற்றவர்கள்ஆகிருர்கள்?

பண்டாசுர வதத்தைப் பற்றிய விரிவான விளக்கங்களெல்லாம். பிரம்மாண்ட புராணததின் ஒரு பகுதியான லலிதோபாக்கியானத்தில் கூறப்பட்டுள்ளன. ஆனல், அதில்கூடக் காணப்

படாத பல அரிய செய்திகள் "திரிபுரா இரகசியம்" என்னும் கிரந்தத்திலே கூறப்பட்டுள்ளன. அந்த கிரந்தத்தை அனுசரித்தே ஸ்ரீ லலிதாதேவியின் ஆவிர்பாவம் பற்றிய பல விஷயங்களை இங்கு நான் தொகுத்துக் கூறியுள்ளேன். "ஸ்ரீ வித்யா வாசஸ்பதி," "ஸ்ரீ வித்யா மார்த்தாண்டர்" என்பன போன்ற பல உயரிய விருதுகளைப் பெற்றுள்ளவரும், எனக்கு ஆச்சார்யதுல்யரும், வித்வத் சிகாமணியுமான பிரம்மஸ்ரீ C. V. ஸ்வாமி சாஸ்திரிகள் என்ற மகனீயரின் திருவருளாலேயே, இது எனக்கு சாத்தியமாயிற்று என்ற உண்மையை இங்கு பணிவுடனும், பெருமையுடனும் தெரிவித்துக் கொள்கிறேன்.

# 4. ஸ்ரீ தவக்காமாக்ஷியின் திவ்ய சரிதம் I



நிர்குண பரசிவமாகிய காமேஸ்வரனைத் தன் பதியாகப் பெற்றதால், ஸ்ரீ லலிதாம்பிகைக்குக் காமேஸ்வரி எனப் பெயர் வந்தது. இந்தக் காமேஸ்வரன் வேறு, கைலாசபதியாகிய பரமேஸ்வரன் வேறு என்பதை நாம் இங்கு நினைவு படுத்திக் கொள்ள வேண்டும்.

எப்படி என்றால், பரமேஸ்வரன் தன் கையிலே மான், மழு, உடுக்கை, சூலம் இவற்றைத் தரித்தவர். ஆனால் காமேஸ்வரனுடைய திருக்கரங்களில் இவற்றில் எதுவுமே கிடையாது. அவர் தன் பத்தினியாகிய லலிதாம்பிகையைப் போலவே பாசம், அங்குசம், கரும்பு வில், புஷ்பபானங்கள் ஆகிய ஆயுதங்களைத் தரித்தவர்.

கைலாசபதியாகிய பரமேஸ்வரன் இடையில் புலித்தோல் உடுத்தவர். யானைத்தோலைப் போர்த்தவர். ஆனால் காமேஸ்வரனுக்கு இவையெல்லாம் இல்லை. அவர் திருமாலைப் போலவே பொன்னுடை புனைந்தவர்.

பரமேஸ்வரன் நாகங்களை மாலைகளாகவும், கங்கணமாகவும், குண்டலமாகவும் அணிந்தவர். ஆனால் காமேஸ்வரனுக்கு நாகாபரணம் இல்லை. ஸ்வர்ணத்தினாலும், மாணிக்கங்களாலும் ஆன ஆபரணங்களையே அவர் அணிந்திருப்பார்.

பரமேஸ்வரன் விரித்த செஞ்சடையை உடையவர். ஆனால் காமேஸ்வரன் அப்படி அல்லர். அவர் மணிமகுடம் புனைந்த திருக்கோலத்தோடு விளங்குபவர்.

பரமேஸ்வரனுக்கும் காமேஸ்வரனுக்கும் இவை போன்ற பல வேறுபாடுகள் புராணங்களிலே சொல்லப்பட்டுள்ளன.

எல்லாவற்றிலும் முக்கியமாக, உருத்திரன் என்ற முறையில் மஹாப் பிரளய காலத்தில் பிரபஞ்சங்கள் அனைத்தையும்

அழித்து முடிப்பவர் பரமேஸ்வரன். ஆனால் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்ற ஐந்தொழிலுக்கும் அப்பாற்பட்ட நிர்விசேஷ பிரம்மமே காமேஸ்வரன் எனப்படுபவர். அந்தக் காமேஸ்வரன் தான் சிருஷ்டி காலத்தில் பிரம்மாவாகவும், ஸ்திதி காலத்தில் விஷ்ணுவாகவும், சம்ஹார காலத்தில் உருத்திரனாகவும், திரோதானசமயத்தில் ஈஸ்வரனாகவும், அனுக்கிரஹ சமயத்தில் சதாசிவமாகவும் விளங்குகிறார். அப்போது பிரம்ம சக்தியாகிய சரஸ்வதியாகவும், விஷ்ணு சக்தியாகிய லக்ஷ்மியாகவும், உருத்திர சக்தியாகிய பார்வதியாகவும், ஈஸ்வரசக்தியாகிய ஈஸ்வரியாகவும், சதாசிவ சக்தியாகிய அநுக்கிரஹதை என்னும் திருவருளாகவும், ஸ்ரீகாமேஸ்வரியே விளங்குகிறாள். இந்தக் காமேஸ்வர காமேஸ்வரிகளின் திருவுளப் பாங்கின்படியே தான், புவனங்கள் அனைத்தையும் பிரம்மாவும் சரஸ்வதியும் படைக்கின்றனர்; விஷ்ணுயும் லக்ஷ்மியும் காக்கின்றனர்; பரமசிவன் எனப்படுகிற உருத்திரனும் பார்வதியும் அழிக்கின்றனர்! ஈஸ்வரனும் ஈஸ்வரியும் மறைக்கின்றனர்; சதாசிவனும் அநுக்கிரஹதையும் அருள்கின்றனர். ஸ்ரீ வித்யா தந்திரங்களின் சாரமாக உள்ள இந்த அடிப்படை உண்மையை நாம் மறந்துவிடலாகாது.

### உயிர்களுக்கு எப்போது இன்ப வேட்கை ஏற்படுகிறது?

அப்படியானால் அந்த நிர்குண பிரம்மத்திற்குக் காமேஸ்வரன் என்ற பெயர் எப்படி வந்தது?

மஹாப்பிரளயத்தின்போது பிரம்மா, விஷ்ணு, உருத்திரன் முதலான சகல தேவர்களும், அவர்கள் வாழ்கின்ற சகல புவனங்களும், மற்றைய உயிர்க்குலங்கள் அனைத்தும் அந்த பரப்பிரம்மத்தினிடத்தேபோய்ஒடுங்குகின்றன. நாம்நாள்தோறும்சிலமணிநேரம் உறங்கி ஓய்வு பெறுவது போல, மஹாப்பிரளயத்தின் இறுதியில் உயிர்கள் அனைத்தும் பரப்பிரம்மத்தினிடத்தே தான் உறங்கி ஓய்வு பெறுகின்றன. இரவில் சில மணி நேரம் நன்றாக உறங்கி நமக்குத் தேவையான ஓய்வைப் பெற்றிருப்போமானால், அதற்குமேல் நம்மால் படுக்கையில் கிடக்க முடியாது; எழுந்து காரியங்களை கவனிக்கத் துடிப்பு ஏற்பட்டுவிடும். அதேபோல், பரப்பிரம்மத்தினிடத்தே உறங்கிக் கிடக்கும் உயிர்களும், தமக்குத் தேவையான ஓய்வைப் பெற்ற பிறகு, மீண்டும் விழித்தெழுந்து செயல்பட வேட்கை கொள்ளும். உயிர்களின் அந்தவேட்கை நிறைவேற, அவற்றிற்கு உடல், மனம் போன்ற கருவிகரணங்களும், அவை சஞ்சரிப்பதற்கான உலகங்களும், மீண்டும் படைக்கப்பட வேண்டும்.

உயிர்களுக்காக உலகத்தைப் படைக்க வேண்டும் என்ற விருப்பம் அப்போது பிரம்மத்திற்கு ஏற்படுகிறது. அந்த விருப்பத்திற்குத்தான் உபநிடதங்களின் பாஷையில் காமம் என்று பெயர்.

பரப்பிரம்மத்தினிடத்தே காமம் எழும்போது, அவர் காமேஸ்வரன் எனப் பெயர் பெறுகிறார். அவருடைய சக்திக்கும்

காமேஸ்வரி என்ற பெயர் வருகிறது. காமேஸ்வர காமேஸ்வரி களின் உள்ளத்திலே உதயமாகிற இந்தக் காமமானது,அவர்கள் மட்டோடு நின்று விடுவதில்லை. ஒன்பது கோடி மைல்களுக்கு அப்பால் உள்ள சூர்யனின் கிரணங்கள் இந்த பூமண்டலத்தி லுள்ள எண்ணற்ற பனித்துளிகளிலும் பளிங்குக் கற்களிலும் பிரதிபலிப்பது போல, பரப்பிரம்மத்தினிடத்தும் பராசக்தியிடத் தும் எழுகின்ற காமமானது, சகல உலகங்களிலும் உள்ள எண் ணிறந்த உயிர்க் குலங்களின் உள்ளங்களிலேயும் பிரதிபலிக் கின்றது. அப்போதுதான் அந்த உயிர்கள் சிற்றின்ப வேட்கையை அடைகின்றன.

### இறைவன் இறைவியரின் சிருங்கார லீலைகள்

சிற்றின்ப வேட்கை இல்லாவிட்டால், உலகில் இனப்பெருக்கம் ஏற்படாது. சிற்றின்ப வேட்கையால் உறவு கொள்ளும் போது, அங்கு ஒரு புதிய உயிர் பிறவியை அடைகிறது. ஒவ்வொரு உயிருக்கும் அதனுடைய பரிபக்குவத்திற்குத் தக்க உடலும் கருவி கரணங்களும் வழங்கப்பட்டால் அன்றி, அவை உலகிலே வாழ இயலாது. உயிர்களை இவ்வாறு வாழ வைப்பதற்காகவே, மாதா பிதாக்களின் உள்ளங்களிலே சிற்றின்ப வேட்கையைத் தோற்றுவிக்கும் பொருட்டுக் காமேஸ்வரனும் காமேஸ்வரியும் காதல் நாடகத்தில் ஈடுபடுகின்றனர். இந்த உண்மையைக் கருத் திற் கொண்டுதான், காதலை ஒரு தெய்விக உணர்ச்சியாகப் போற்றி வந்திருக்கின்றனர் நமது புகழ் மிக்க முன்னோர்கள்.

காதலை வடமொழியில் சிருங்காரம் என்று கூறுவார்கள். சிருங்காரம் என்பது நவரசங்களில் ஒன்று. பக்தி என்பது கூட அவைகளில் ஒன்றுதான். பயன் கருதாத அன்பு இறைவன் மீது செலுத்தப்படுமானால், அதற்கு பக்தி என்று பெயர். அதே பயன் கருதாத அன்பை ஆண் மகன் ஒரு பெண்ணின் மீது (அல்லது, ஒரு பெண்மணி ஆண் மகன் மீது) செலுத்தும் போது, அதுவே தெய்விகமான சிருங்கார ரசம் ஆகி விடுகிறது. பர தேவதையாகிய ஸ்ரீ லலிதாம்பிகை இந்த சிருங்கார ரசத்தையே தன் வடிவமாகக் கொண்டவள் என்கின்றன ஸ்ரீ வித்யா ஆக மங்கள்.

உயிர்க்குலங்களின் மகிழ்ச்சியைக் கருதி, அன்னை பராசக்தியும் தன் பர்த்தாவோடு அவ்வப்போது லீலா விநோதங்களிலே ஈடு படுவாளாம். அப்படி ஈடுபட்டாலும், ''அவள் என்றைக்குமே கன்னிப் பெண்தான்— அவனும் என்றைக்குமே பிரம்மச்சாரி தான்!'' என்று வலியுறுத்திக் கூறுகிறது சிவஞான சித்தியார் என்னும் சித்தாக்த சாத்திரம். தவத்திலே முதிர்ச்சியுற்ற மகா ஞானிகளுக்குத்தான் இந்த இரகசியம் விளங்கும் என்று அது மேலும் கூறுகிறது.

அப்படிப் பார்க்கும்போது, சிவசக்திகளின் லீலைகள் அனைத் துமே உயிர்க்குலம் வாழ்வதற்காக நடத்தப்படுகிற ஒரு முடி வில்லாத் திரு நாடகம் என்று தெரிகிறது அல்லவா?

தூய ஒளி நம் கண்களுக்குப் புலப்படுவதில்லே

அந்தத் திரு நாடகத்தின் ஓர் அம்சமாக, ஒரு சமயம் தன் பதியாகிய காமேஸ்வரனின் இரு கண்களேயும் பொத்தினுள் அன்னே காமேஸ்வரி. அவ்வளவுதான்! எண்ணற்ற அண்டங்கள், பேரண்டங்கள், பிரம்மாண்டங்கள் ஆகிய அனேத்துலகமும் ஒரு மகா மகாப் பிரளயத்தில் மூழ்கி விட்டன. இதையே இன்னெரு விதமாகச் சொல்வது என்ருல், தேவனின் கண்களே தேவி பொத்தியவுடன், அந்தக் கணத்திலேயே அனேத்துலகங்களும் அடியோடு அழிந்து விட்டன.

அம்பிகை வெறும் விளேயாட்டாகத்தான் பொத்தினுள், ஆனல் அது ஒரு விபரீதமான விளேவை உண்டு பண்ணிவிட்டது. அது எப்படி?

காமேஸ்வரனின் வலது கண்ணுக இருப்பவன் சூர்யன், இடது கண்ணுக இருப்பவன் சந்திரன், அந்த இரண்டு கண்களேயும் பொத்தியவுடன் உலகில் இருள் சூழ்ந்து விட்டது என்று தான் பௌராணிகர்கள் பொதுவாகப் பேசுவார்கள். ஆனல் அவர்கள் கூறுவது போல் அது இருள் மட்டுமல்ல; அனேத்து உலகங்களின் அழிவே அப்போது ஏற்பட்டு விட்டது.

இந்த இடத்தில் சில முக்கியமான தத்துவங்களே தெரிந்து கொள்ள வேண்டும். முதலாவதாக, காமேஸ்வரரின் வலக் கண்ணுகவும் இடக் கண்ணுகவும் இருப்பவர்கள், உலகத்திற்கு ஒளி ஊட்டுபவர்களும், நாள்தோறும் வானவெளியில் காணப்படுபவர்களுமான சூர்ய சந்திரர்கள் அல்லர். வானவெளியில் எண்ணிறந்த சூர்ய மண்டலங்களும் சந்திர மண்டலங்களும் இருப்பதாக, இன்றைய வானநூல் வல்லுநர்களே ஒப்புக் கொள்கிருர்கள். நமது பழமையான புராண இதிகாசங்களிலும் இதேக் கருத்துத் தான் கூறப்பட்டுள்ளது. அதாவது, இப்பிரபஞ்சத்திலே கோடானு கோடி சூர்ய சந்திரர்கள் இருந்து, தத்தம் எல்லேக்கு உட்பட்ட உலகங்களுக்கெல்லாம் ஒளியூட்டி வருகிருர்கள்.

ஆனல், அவர்கள் ஊட்டுகிற அந்த ஒளியானது, அவர்களுடைய ஸ்வயமான ஒளியல்ல. ஸ்வயமான தூய ஒளியாய் இருந்தால், அந்த சூர்ய சந்திரர்கள் நம் கண்களுக்குப் புலப்பட்டிருக்க மாட்டார்கள்.

ஏனென்ருல், தூய ஒளி எதுவுமே நம் கண்களுக்குப் புலப்படுவதில்லே. ஏதேனும் ஒரு பொருளின் மீது பட்டுப் பிரதிபலிக்கிற ஒளி மட்டுமே நம் கண்களுக்குப் புலப்படும். எடுத்துக்காட்டாக, சூர்யனிடமிருந்து புறப்பட்டு பூமியில் வந்து ஒளி பரப்புகிற கிரணங்களே, அந்த சூர்யனுக்கும் பூமிக்கும் உள்ள இடைவெளியிலே நம்மால் காண முடிவதில்லே. அந்தக் கிரணங்கள் வானவெளியில் பறக்கின்ற ஒரு பறவையின் மீதோ, பூமியிலுள்ள ஒரு கட்டடத்தின் மீதோ படும்போதுதான், கதிரவனின் ஒளியை நம்மால் காண முடிகிறது.

இந்த உண்மையைக் கருத்திற் கொண்டு பார்ப்போமாயின், உலகிலே நம்மால் காணப்படுகிற எந்தப் பொருளினது ஒளியும் அதனுடைய ஸ்வமயமான ஒளியல்ல — வேறோர் ஒளியின் பிரதி பலனமே அது என்பதை நாம் தெளிவாகப் புரிந்து கொள்ள லாம். அந்த முறையில், சூர்ய சந்திரர்கள் நம் கண்களுக்குத் தெரிவதால், அவர்களிடத்தே நாம் காண்கின்ற ஒளியும் கூட அவர்களது ஸ்வயமான ஒளியல்ல என்று ஆகிறது அல்லவா?

சாதாரணமாக, சந்திரனுக்கு ஸ்வயமான ஒளி கிடையாது, சூரியனிடமிருந்து கிடைக்கின்ற ஒளியையே அது பிரதிபலிக்கிறது என்பர். சந்திரனுக்கு மட்டுமல்ல; சூர்யன் என்ற கோளத்திற்கும் கூட ஸ்வயமான ஒளி கிடையாது. வேறு ஏதோ ஓர் ஒளியை பிரதிபலிப்பதன் பயனாகவே, அது ஓர் ஒளிப் பொருளாக விளங்கு கிறது.

அப்படியானால் சூர்யனிடத்தே பிரதிபலிக்கின்ற அந்த "வேறு ஓர் ஒளி'' யாது?

நாம் நாள்தோறும் கண்ணால் காண்கின்ற இந்த சூர்ய சந்திரர்கள் மட்டுமல்ல; இன்னும் கோடானு கோடி சூர்ய சந்திரர்களிடத்தேயும் பிரதிபலித்து, அவர்கள் வாயிலாக எண்ணற்ற புவனங்களுக்கெல்லாம் ஒளியூட்டி உதவுகின்ற எல்லை யற்ற பெரும் பேரொளி ஒன்று உண்டு. அதனைத்தான் உப நிதடங்கள் பிரம்மம் என்ற பெயரால் குறிப்பிடுகின்றன.

கோடானு கோடி நாம ரூபங்களை இறைவன் தன் அடியார் களுக்காக ஏற்றுக்கொண்டாலும், அவற்றுள் எதுவுமே அவனது உண்மையான ஸ்வரூபம் அல்ல என்றால், பின் எதுதான் அவனது உண்மையான ஸ்வரூபம்? உண்மை, அறிவு, இன்பம் இவை மூன்றும் ஒரே பொருளாக விளங்குகின்ற சச்சிதானந்த நிலையே அவனது உண்மையான ஸ்வரூபம். அதுவே எண்ணற்ற சந்திர சூர்யர்களுக்கு எல்லாம் ஒளி ஊட்டிக் கொண்டிருக்கின்ற ஸ்வயம் பிரகாச ஸ்வரூபம். அதுவே பரப்ரம்மம் எனப்படுவது.

அந்தப் பரப்ரம்மமே ஸ்ரீ லலிதாம்பிகையை மணந்து கொள் ளும் பொருட்டுக் காமேஸ்வரனாக ஆவிர்பவித்தது. காமேஸ்வரன் என்ற அந்த நாமத்தையும் ரூபத்தையும் ஏற்றுக் கொண்டபோது சந்திர சூர்யர்களுக்கெல்லாம் ஒளி வழங்கி உதவுகின்ற அதனு டைய பேராற்றலானது, அந்தக் காமேஸ்வரனது இரண்டு கண்களையும் நிலைக்களன்களாகக் கொண்டு விளங்கியது. எனவே தான், தேவி அந்தக் கண்களைப் பொத்தியவுடன் உலகனைத்தும் இருளில் மூழ்க நேர்ந்தது.

ஆனால், அது சாதாரண இருள் அல்ல. சாதாரண இருளிலே பிறபொருட்கள் நம் கண்ணுக்குத் தெரியாமல் போகலாம். நம் முடைய கைகால்களைக் கூட நாம் கண்ணால் பார்க்க முடியாமல் இருக்கலாம். எனினும், நம்முடைய அறிவையோ உணர்வையோ அப்போது நாம் இழந்து விடுவதில்லை.

## மரணத்தின் போது உயிர்கள் அடையும் அநுபவம் யாது?

நாம் உறங்கும் போது கனவுகள் காண்கிருேம், அந்தக் கனவில் கூட நம் உணர்வை நாம் இழந்து விடுவதில்லே. உணர்வை இழந்து விட்டால், நம்மால் கனவு காண்பதற்கே இயலாமல் போய் விடும், அந்தக் கனவும் ஒடுங்கி விடுகின்ற உறக்க நிலே ஒன்று இருக்கிறது. அதனே வடமொழியில் ஸுஷுப்தி என்றும், தமிழில் சுழுத்தி என்றும் சொல்வார்கள். சுழுத்தி என்ற அந்த ஆழ்ந்த உறக்கத்தின்போது, நாம் உயிரோடு இருக்கிருேம் என்ற உணர்வு கூட நமக்கு இல்லாமல் போய் விடுகிறது. பிற பொருட்கள் எண்ணங்கள் உணர்ச்சிகள் இவற்றை மட்டுமன்றி, தான் என்ற உணர்வையும் கூட மறைத்து விடுகிற அந்தப் பேரிருளில் நாம் ஒவ்வொரு நாளும் மூழ்கி எழுகின்ருேம். நாள் தோறும் நமக்கு ஏற்படுகிற இந்த உறக்கத்தை நித்தியப் பிரளயம் என்று சொல்வார்கள். நித்தியப் பிரளயத்திலே சில மணி நேரம் உயிர்கள் அனுபவிக்கின்ற இந்தப் பேரிருளே, உலகத்தின் அழிவுக் காலமாகிய மஹாப் பிரளயத்தின் போது, உயிர்கள் பன் நெடுங் காலம் அனுபவிக்கின்றன.

சுருக்கமாகச் சொன்ஞல், தேவனின் கண்களேப் பொத்தியதன் மூலம், உலகங்கள் அனேத்திற்கும் அன்னேயாகிய பரதேவதை, அவ்வுலகங்களே யெல்லாம் ஒரே நொடியில் அழித்து முடித்து விட்டாள். இது எவ்வளவு பெரிய விபரீதம்!

### உயிர்க் குலத்தின் மரணமூர்ச்சை

உலகங்களின் படைப்பும் அழிவும் எப்படி நிகழ்கின்றன என்பதைப் பற்றி, லலிதா சஹஸ்ர நாமஸ்தோத்திரத்திலே ஒரு விளக்கம் கொடுக்கப் பட்டு உள்ளது. நாம் இயல்பாகக் கண்களே இமைக்கும் நேரத்தினேயே நொடிப் பொழுது என்கிருேம். அந்த ஒரு நொடிக்குள்ளே, திறந்திருக்கும் கண்ணே மூடுவது, மூடிய கண்ணேத் திறப்பது ஆகிய இரண்டுகாரியங்கள் நிகழ்ந்து விடுகின்றன. பொதுவாக, தேவர்கள் தம் கண்களே இமைப்பதில்லே. அதனுல் தான் அவர்களுக்கு இமையவர் என்னும் பெயர் வந்தது.

சாதாரணமான தேவர்களே கண் இமைப்பதில்லே என்ருல், காமேஸ்வரியைப் பற்றிக் கேட்க வேண்டுமா? அவள் தன்கண்களே இமைக்கவே மாட்டாள். அப்படி எப்போதாவது ஒரு தடவை இமைத்து விடுவாளாயின், உலகில் மஹாப் பிரளயம் ஏற்பட்டு விடுமாம்.

பரதேவதை தன் கண்களே மூடுகின்ற முதலாவது அரை நொடிப் பொழுதில் உலகங்கள் அனேத்தும் அழிக்கப்பட்டு விடுகின்றன. அவள்தன் கண்களேத் திறக்கின்ற இரண்டாவது அரை நொடிப்பொழுதில், அழிவுற்ற உலகங்கள் அனேத்தும் மீண்டும் ஆக்கப்படுகின்றன. "உந்மேஷ நிமிஷோத்பந்ந விபந்ந புவநாவளீ" என்ற அம்பிகையின் திருநாமமே இதற்குச் சான்ருகும்.

காமேஸ்வரியும் காமேஸ்வரனும் தோற்றத்தில் இருவராகக் காட்சி அளித்த போதிலும், உண்மையில் அவர்கள் ஒருவரே

அன்றி வேறு அல்லர். எனவே காமேஸ்வரியின் குண ஸௌந்தர் யங்கள் அனைத்தும், (தான் உண்மையில் நிர்குணப் பிரம்மமே ஆயினும் நாமரூபங்களை ஏற்றுக்கொண்டுவிட்ட காரணத்தால்) காமேஸ்வரனுக்கும் உண்டு. அந்த முறையில், காமேஸ்வரியைப் போலவே காமேஸ்வரனும் வெறுமே தன் கண்களை ஒருமுறை இமைப்பதனாலேயே அண்ட கோடிகளின் அழிவையும் ஆக் கத்தையும் உண்டு பண்ணிவிட வல்லவர் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை.

அதனால் தான், காமேஸ்வரனுடைய கண்கள்மூடப்பட்டவுடன் உலகங்கள்அழிந்து ஒழிந்தன. என்றைக்கு இருந்தாலும் ஒரு நாள் மஹாப்பிரளயம் வந்தே தீரும். அப்போது உலகங்களும் அழிந்தே தீரும் என்பது உண்மையே. ஆனால் அத்தகைய பிரளயம் வரும் போது உயிர்களெல்லாம் அதனை ஏற்றுக் கொள்ளக்கூடிய பக்குவ நிலையை அடைந்திருக்கும். அந்தபக்குவநிலைவருவதற்கு முன்னமே யே பரதேவதை சற்று விளையாட்டுதனமாகப்பிரளயத்தைத் தோற் றுவித்து விட்டாள். இது எப்படி என்றால்—

நாம் உறக்கத்தின் போது உணர்வை இழந்து விடுவதைப் போலவே, மூர்ச்சையுற்ற நிலையிலும் இழந்து விடுகிறோம். ஆனால் இரண்டுக்கும் எவ்வளவு வேறுபாடு இருக்கிறது? உறக்கம் என்பது நாம் இளைப்பாறும் பொருட்டு நமக்கு இயல்பாகவே ஏற்படுவது. ஆனால் மூர்ச்சை என்பது அப்படியல்ல. அது ஏதேனும்ஒருவிபத்தின் காரணமாக நமக்கு ஏற்படுவது. உலகனைத்தையும் அத்தகைய ஒரு விபத்துக்குள்ளாக்கி, உயிர்க்குலத்தையே மூர்ச்சையில் ஆழ்த்திவிட் டாள் அம்பிகை காமேஸ்வரி.

**சாபம் பெற்ற தேவர்கள் பூலோகத்துக்கே வருகிறார்கள்!**

இது காமேஸ்வரனுக்குக் கோபத்தைஉண்டு பண்ணியது. "உல கனைத்திற்கும்தாயாகிய நீ இப்படிப்பொறுப்பற்றமுறையில் நடந்து கொண்டது, ஒரு பெருந்தவறு. இதற்குரிய தண்டனையை நீ அனு பவித்தே ஆக வேண்டும்!" என்று அம்பிகைக்கு அவர் ஒரு சாபம் கொடுத்தார்.

தேவதைகளுக்கும் அவர்களைப்போன்ற முனிபுங்கவர்களுக்கும் சாபங்கள் கிடைக்குமானால், அதற்கு அவர்கள் செய்த தவறுகள் மட்டுமே காரணம் என்று கருதக்கூடாது. இம்மண்ணுலக வாசிக ளான நாமெல்லாம் செய்துள்ள புண்ணியமே அதற்கு அடிப்ப டைக் காரணம் என்று சொல்ல வேண்டும்.

ஏனென்றால், சாபத்துக்கு ஆளான தேவர்கள், அதற்குப் பிராய சித்தமாக மண்ணுலகில்வந்து தவம் செய்கிறார்கள், அல்லது மனித ராகப்பிறவி எடுக்கிறார்கள். மாண்டவ்ய முனிவரின் சாபத்துக்கு ஆளான எமதருமன் அப்படித்தான் விதுரனாக வந்து பிறவி எடுத் தார். வசிஷ்டரின் சாபத்துக்கு ஆளான வசுக்களில் ஒருவன் அப் படித்தான் பீஷ்மனாக வந்து பிறவி எடுத்தான். பிருகு முனிவரின் சாபத்துக்குஆளான மஹாவிஷ்ணு அப்படித்தான் இராமனாகவந்து அவதரித்தார். துர்வாசரின்சாபத்துக்கு ஆளான தேவேந்திரனும்

ஐராவதமும், நம் பாரத பூமியிலே மதுரை என்ற பெயரால் வழங்கப்படுகிற கதம்பவனத்தைஅடைந்து இறைவனைபூஜித்தனர். அதேபோல் மார்க்கண்டேயர், பிருகஸ்பதி, சுக்கிராச்சாரியார்,நாரதர், குபேரன், வருணன் போன்ற எண்ணற்ற தேவர்களும் முனிவர்களும் தவம் செய்து சாப விமோசனம் பெற்ற திருத்தலங்கள் இங்கே பலப்பல இருக்கின்றன. அந்தத் தபஸ்விகளுக்கு இறைவன் வந்து காட்சி கொடுத்து அருளிய காரணத்தால், அத்தலங்கள் மகத்துவம் பொருந்தியவை ஆயின.இறைவன் எங்கும் உளன் என்ற போதிலும், அந்தத் தலங்களிலே அவனுடைய சாந்நித்தியம் சிறப்பாக அமைந்திருக்கும் காரணத்தால், அங்குச் சென்று அவனை வழிபடுகிறவர்கள் அவனுடைய திருவருளை எளிதில் பெற இயலுகிறது என்பது ஐதிகம். இது மண்ணுலக வாசிகள் செய்த புண்ணியம் தானே?

எடுத்துக்காட்டாக,திருக்கயிலாயத்திலே ஆலாலசுந்தரர் என்பவர் பெற்ற ஒரு சாபத்தின் விளைவாக,நம் தமிழகத்திலே ஒரு சுந்தரமூர்த்தி தோன்றினர். அவர் அருளிச் செய்த திருத்தொண்டத் தொகையிலிருந்து நமக்குச் சேக்கிழார் மூலம் ஒரு பெரியபுராணம் கிடைத்தது. சைவமும் தமிழும் செய்ததவப்பயன் இதுஎன்றுசொல்வது மிகையாகாது.

# 5. ஸ்ரீ தவக் காமாட்சியின் திவ்ய சரிதம் II

அதே போல்,நமது பாரத புண்ணிய பூமியும்,குறிப்பாக நமது தமிழ்த்திருநாடும் செய்ததவப்பயனுக, அன்று காமேஸ்வரிக்கு ஒரு சாபம் கிடைத்தது. இறைவிக்கு இறைவன்கொடுக்கக் கூடிய தண்டனைகளிலெல்லாம் மிகக் கடுமையானது, அவள் அவனை விட்டுப் பிரிந்திருக்க வேண்டும் என்று ஆணையிடுவது தான். இறைவிஎதை வேண்டுமானுலும் பொறுத்துக் கொள்வாள், தன் பதியை விட்டுப் பிரிந்து இருப்பதை மட்டும் அவளால் பொறுக்கமுடியாது.அப்படிப் பிரிந்திருக்க நேரிட்டால், அவனை மீண்டும் போய் அடைவதற்காக எவ்வளவு கடுமையான தவத்தை வேண்டுமானுலும் அவள் உவகையோடு ஏற்றுக் கொள்வாள்.

இமவானின்புதல்வி பார்வதியாக அவள்திருஅவதாரம் செய்த போது அப்படித்தான் ஒரு கடுமையான தவத்தை மேற்கொண்டாள். இப்போதுஅதனினும் கடுமையான தவத்தை மேற்கொள்ள வேண்டிய கட்டாயம் அவளுக்கு ஏற்பட்டது. அவள் தவம்செய்த அந்தத் திருத்தலம் தான் ஆம்ராரண்ய க்ஷேத்ரமாகிய மாங்காடு எனப்படுவது.

''நீமாங்காட்டில் போய்க் கடுமையானதவம் செய்யவேண்டும். நீஎன் கண்ணைப் பொத்திய குற்றத்திற்கு அதுவே பிராயச்சித்தமாகும்!'' என்று ஆணையிட்டார் காமேஸ்வரன். அவருடைய கட்டளையைச் சிரமேல் தாங்கி, தண்டமிழ்நாட்டுத் தொண்ட

மண்டலத்தைச் சேர்ந்த மாங்காட்டை வந்தடைந்தாள் மஹா தேவி காமேஸ்வரி.

அமிருதக் கடலின்நடுவே இரத்தினமயமான ஒருதீவிலே, ஸ்ரீநகரம் என்ற பதியிலே சிந்தாமணி கிருஹத்திலே கொலு வீற்றிருக்கும் ஸ்ரீ மஹாதிரிபுர சுந்தரி, பண்டாசுரவதத்தினை ஒரு வியாஜமாக வைத்துக் கொண்டு, பிரம்மா, விஷ்ணு, உருத்திரன் போன்ற தேவதேவர்கள் தரிசித்து மகிழ்வதற்கு வாய்ப்பளிக்கும் வகையில் லலிதாம்பிகை என்ற திரு நாமத்தை ஏற்று, இமயகிரியின் நடுவே உள்ள ஒருகொடு முடியிடத்தே விஸ்வகர்மாவால் நிர்மாணிக் கப்பட்ட ஸ்ரீ புரம் என்னும் திரு நகரத்திலே வந்து அமர்ந்து கொலு வீற்றிருக்க மனமுவந்தாள். ஆனால், அந்த ஸ்ரீ புரத்தையோ, அதில் உள்ள சிந்தாமணிக் கிருஹம் என்னும் அவளது அரண்மனையையோ தன் கண்ணால் காணும் தகுதி, குறு முனியாகிய அகஸ்தியர் போன்றவர்களுக்கே இல்லாதிருந்தது என்கிறது திரிபுரா இரகசியம்.

## அகஸ்தியரின் பெருமை

அகஸ்தியருடைய குருநாதர் ஹயக்ரீவர். மஹா விஷ்ணுவே ஒரு சந்தர்ப்பத்தில் தன் தலையை இழந்து, அதற்கு பதிலாக ஒரு குதிரையின் தலையைப் பொருத்திக் கொள்ள நேரிட்டதாம். அதுதான் ஹயக்ரீவ ஸ்வரூபம். ஹயம் என்றால் குதிரை. க்ரீவம் என்றால் கழுத்து. எனவே ஹயக்ரீவர் என்றால், குதிரைக் கழுத்தோடு கூடியவர் எனப் பொருள்படும்.

அந்த ஹயக்ரீவர் தம்முடைய மாணவராகிய அகஸ்தியருக்கு பண்டாசுரவதம் பற்றிய வரலாறுகளை விரிவாகக் கூறி, மேரு மலையில் நிர்மாணிக்கப்பட்ட ஸ்ரீபுரத்தைப் பற்றியும் அழகுற வருணித்தாராம். அப்போது அகஸ்தியர், "மேரு மலையில் என் காலடி படாத இடமே கிடையாது. ஆனால், தாங்கள் கூறும் ஸ்ரீபுரம் என்ற நகரத்தை நான் அங்கு கண்டதே இல்லையே?" என்று வினவினாராம்.

அதற்கு ஹயக்ரீவர், "அகஸ்தியரே! இந்த ஸ்ரீபுரமானது ஸ்ரீ லலிதாம்பிகையின் உபாசகர்கள் கண்களுக்கு மட்டும்தான் புலப்படும். மற்றையோர்கள் எவ்வளவு பெரிய தபஸ்விகளாக இருந்தாலும், அவர்களுக்குத் தென்படாது. ஆகையால், நீர் முறைப்படி ஸ்ரீ வித்யா மந்திர தீட்சையைப் பெற்று, தேவியை நன்கு உபாசனை செய்து, அந்த ஸ்ரீ புரத்தை தரிசிப்பீராக!" என்று அருளிச் செய்தாராம்.

அகஸ்தியர் என்பவர் ஸ்ரீ ராமபிரானின் குல குருவாகிய வசிஷ்டருடைய மூத்த சகோதரர். பார்வதியின் திருமணத்திற்காக முப்பத்து முக்கோடி தேவர்களும், நாற்பத்தெண்ணாயிரம் முனிவர்களும், மற்றும் கந்தர்வர்கள், யக்ஷர்கள் போன்ற எண்ணற்ற பேர்களும் இமயமலையில் கூடியபொழுது, அந்த பாரம் தாங்காமல் பூ மண்டலத்தின் வடகோடி கீழே ஆழ்ந்து தென்கோடி மேலே எழும்பியதாம். அதை சமன் செய்வதற்காகப்

பரமசிவனே அகஸ்தியரைத் தென் நாட்டில் போய் அமர்ந்திருக்குமாறு கேட்டுக் கொண்டாராம்.

அதாவது, கோடிக் கணக்கான தேவர்கள் முனிவர்கள் போன்றோரது மொத்த எடைக்கு நிகரான கனத்தை, அகஸ்தியர் தம்முடைய உடலிலே பெற்றிருந்தாராம்! இத்தனைக்கும் ஒரு கட்டை விரல் அளவு உயரமும் பருமனும் உடையவராக அவர் காட்சியளித்தார். சப்தரிஷிகளில் ஒருவரான அவர், ஏழு கடல்களையும் ஓர் உளுந்து அளவு தண்ணீராக்கி, அதைத் தன் உள்ளங்கையில் அடக்கி உறிஞ்சிக் குடித்தவர். அப்பேர்ப்பட்ட மகத்தான தவ வலிமை படைத்தவருக்கே தேவியினது தலைநகரான ஸ்ரீ புரம் கண்ணுக்குத் தெரியவில்லை என்றால், நம் போன்ற சாமான்ய மக்கள் அதைத் தம் கனவிலாவது நினைத்துப் பார்க்க முடியுமா?

### அம்பிகையின் அளப்பருங் கருணை

முதலாவதாக, மேரு மலையே நம் கண்களுக்குப் புலப்படாதது ஆயிற்றே? மேருமலை என்பது நம் கண்ணெதிரே காட்சியளிக்கும் இமயமலை அல்ல. இமயமலை ஒரு பனிமலை என்றால், மேருமலை ஒரு பொன்மலை, பிரம்மா, விஷ்ணு, உருத்திரன் என்ற மூவர்களுடைய தலைநகரங்கள் முறையே சத்திய லோகத்திலும் வைகுண்டத்திலும் கைலாசத்திலும் இருப்பது போல, அந்த மேருமலையின் கொடுமுடிகளிலும் அமைந்திருக்கின்றன. அவற்றின் நடுவே உள்ள கொடு முடியில்தான் ஸ்ரீபுரம் அமைந்திருக்கிறது. ''ஸுமேருமத்யச்ருங்கஸ்தா'' என்ற தேவியின் திருநாமமே இதற்குச் சான்று.

சூர்ய சந்திரர்கள் நாள்தோறும் மேருமலையை வலம் வருகிறார்கள் என்று நமது திருமுருகாற்றுப் படையிலேயே கூறப்பட்டுள்ளது. இவ்வளவு சிறப்புகள் பொருந்திய மஹாமேரு பர்வதத்தை நம் போன்ற சாதாரண மனிதர்கள் யாரும் கண்ணால் பார்த்தது இல்லை. மேருவையே பார்க்க முடியாது என்னும் போது, அதிலுள்ள ஸ்ரீபுரத்தை நாம் எப்படிக் காண முடியும், அணுக முடியும்?

பிரம்மா, விஷ்ணு போன்ற தேவ தேவர்கள் தன்னை தரிசிக்கும் பாக்கியத்தைப் பெற வேண்டும் என்ற கருணையின் காரணமாகவே, அமிருதக் கடலில் உள்ள ஸ்ரீநகரத்தை விட்டு, அம்பிகை மேரு கிரியில் உள்ள ஸ்ரீபுரத்திற்குக் குடியேறினாள். தேவ தேவர்களுக்குக் கிடைத்த அந்த பெறற்கரும் பேறு பூலோக வாசிகளாகிய நமக்கும் கிடைக்க வேண்டும் என்ற கருணையினால், அவள் ஸ்ரீபுரத்திலிருந்து மாங்காட்டில் வந்து குடியேற இச்சை கொண்டாள். அந்த இச்சையை நிறைவேற்றிக் கொள்வதற்காகவே அவள் காமேஸ்வரரின் கண்களைப் பொத்தி, அவரது கடுஞ் சாபத்திற்குத் தன்னை ஆளாக்கிக் கொண்டாள் என்பது தான் உண்மையே தவிர, அவள் ஏதோ தெரியாத்தனமாக அவரது கண்களைப் பொத்தி விட்டுச் சங்கடத்திற்கு ஆளானாள் என்று கருதுவது தவறு.

## இரண்டு கங்கா நதிகள்

தேவி தன் கணவரின் கண்களைப் பொத்திய போது என்ன நடந்தது என்பதுபற்றி, இன்னொரு புராண வரலாறும் இருக்கிறது. அதாவது,—

காமேஸ்வரனின் வலக் கண்ணையும் இடக் கண்ணையும் தேவி தன் கைகளால் பொத்தியபோது, உலகனைத்தும் இருள் சூழ்ந்தது. அந்த இருளைப் போக்குவதற்காக இறைவன் தன் நெற்றிக் கண்ணைத் திறந்தான். உடனே அதிலிருந்து அக்கினி தோன்றி உலகங்களைச் சுட்டெரிக்கத் தொடங்கியது. அந்த அக்கினியை அணைப்பதற்காக, தேவி தன் கை விரல்களின் நகக் கண்களிலிருந்து ஒரு ஜலப் பிரவாகத்தைத் தோற்றுவித்தாள். அதுவே கங்கா நதி ஆயிற்று என்பதே அந்தப் புராண வரலாறு.

மஹாபலிச் சக்கரவர்த்தியிடத்தே திருமால் மூன்றடி மண் தானமாகப் பெற்று, பூவுலகனைத்தையும் ஓர் அடியாகவும், வானுலகு அனைத்தையும் இரண்டாவது அடியாகவும் அளந்து முடித்தார் அல்லவா? அவர் வானுலகத்தை அவ்வாறு அளக்கும் போது, அவருடைய திருவடியானது அண்ட முகட்டைப் பிளக்க, அதிலிருந்து ஆகாய கங்கை பெருக்கெடுத்தது என்ற புராண வரலாறும் உண்டு.

இவ்வரலாற்றுக்களின்படி, நமக்கு இரண்டு கங்கைகள் கிடைக்கின்றன. இவற்றுள் சிவபெருமான் தம்முடைய ஜடாபாரத்தில் சுமந்து கொண்டிருப்பது எந்த கங்கை என்னும் கேள்வி எழுகிறது அல்லவா?

சிவபெருமான் தம்சிரசில் சுமந்துகொண்டிருப்பது அம்பிகையின் நகக் கண்களிலிருந்து வெளிப்பட்ட கங்கையே அன்றி, திருமாவின் கால் வழியாக வழிந்த கங்கைஅல்ல என்பதை, அப்பைய தீட்சிதர், மாங்குடி மணிய சிவனூர் போன்ற மஹான்கள் தக்க சான்று களோடு விளக்கியுள்ளனர். அவற்றையெல்லாம் இங்கே விவரிப்பது என்றால் இச் சிறு நூலில் இடம் காணாது. திருமாலின் திருவடியால் பிளக்கப்பட்ட அண்ட முகட்டிலிருந்து வெளிவந்த ஆகாய கங்கையானது, அவரது தூக்கிய காலின் வழியே கீழே வழிந்து பூமியை அடைந்து, மாளவ தேசத்தில் புகுந்து மேற்குக் கடலில் போய்க் கலந்துவிட்டது. எனவே பகீரதன் கடுந்தவம் செய்து பூமிக்குக் கொண்டு வந்த கங்கை அதுவல்ல. காமேஸ்வரியின் கை விரல்களிலிருந்து உற்பத்தியான கங்கையே சிவபெருமானின் துணையோடு பகீரதனால் பூமிக்குக் கொண்டு வரப்பட்டது.

உலகத்தில் மொத்தம் மூன்றரைக் கோடி புண்ணிய தீர்த்தங்கள் இருக்கின்றனவாம். கங்கை நதியில் நீராடுவோருக்கு அந்த மூன்றரைக்கோடி தீர்த்தங்களிலும் நீராடிய பலன் கிடைக்கும் என்று புராணங்களில் கூறப்பட்டுள்ளது. அவ்வளவு மகத்துவம் வாய்ந்த ஒரு புண்ணிய நதி உலகத்திற்குக் கிடைக்க வேண்டும் என்ற கிருபையின் காரணமாகவும், ஸ்ரீ லலிதாம்பிகை தன் கணவரின் கண்களைப் பொத்தியிருக்கலாம் என்று சான்றோர் கூறுவர்.

## வேட்கையும் விரக்தியும் அம்பிகையின் ஸ்வருபங்களே!

ஒரு பெரிய ஆலமரத்தினுடைய கிளைகள், இலைகள், காய்கள், விழுதுகள் போன்ற சகல உறுப்புக்களும் அதனுடைய ஒரே ஒரு சின்னஞ்சிறு விதையினுள்ளே அடங்கி இருக்கின்றன. சராசாரங்கள் அனைத்திற்கும் மூலமான ஒரு விதையைப் போன்றவள் ஸ்ரீ பர தேவதை என்ற பொருளில், அவளைச்''சராசர பீஜம்'' என்று வர்ணிக்கிறது காமகலா விலாசம் என்கிற ஸ்ரீ வித்யா தந்திரம். அதாவது, சகல புவனங்களும், அவற்றில் உள்ள அனைத்துஉயிர் களும், அவற்றின் இயக்கங்களுக்கான இச்சா ஞானக்கிரியா சக்தி களும், ''விதைக்குள் மரம் அடங்கியிருப்பது போல் ஸ்ரீ பர தேவதையிடம் அடங்கியிருக்கின்றன'' என்பது அதன் பொருள். எனவே, உயிர்க்குலங்களின் பந்தம்—மோட்சம், அல்லது போகம் —முக்தி ஆகிய இரண்டுமே, அந்தப் பரதேவதையின் கையில்தான் இருக்கின்றன.

''லோலாக்ஷீ காமரூபிணீ'' என்பது அம்பிகையின் ஆயிரம் திரு நாமங்களில் ஒன்று, பெண்கள்பால் எழுகின்ற ஆசையின் வடிவமாக இருப்பவள் என்பது அதன் பொருள். ''தபஸாஜ்வலந்தீ,'' அதாவது, ''தபஸினுலே ஜொலிப்பவள்'' என்று அவளை வருணிக்கிறது ஸ்ரீதுர்கா ஸூக்தம்.

மனித உள்ளத்தில் எழுகின்ற காமம், அந்தக் காமத்தி னின்றும் விடுவித்து உள்ளத்தைத் தவத்தின்பால் செலுத்துகிற விராகம், இவ்விரண்டுமே அம்பிகையின் ஸ்வரூபங்கள் தாம். சில உயிர்களிடத்தில் அம்பிகை காமம் என்ற வடிவத்தில் விளங்கு கிருள். மற்றும் சில உயிர்களிடத்தே அவள் விராகம் அல்லது வைராக்கியம் என்ற வடிவத்தில் விளங்குகிருள். அவள் காமமாக விளங்கும்போது, ஆண்களும் பெண்களும் சிற்றின்ப வேட்கை கொள்கின்றனர். அவர்களுடைய அந்த வேட்கை பூர்த்தியாக வேண்டும் என்பதற்காக, அவள் சிவத்தோடு கலக்கிருள், இந்த சிவசக்திகளின் ஐக்கியத்தை நமக்கு உணர்த்துவதற்காகவே, திருக்கோயில்களில் நாள்தோறும் இறைவன் அவளது பள்ளி யறைக்கு எழுந்தருளும் சடங்கு நடந்து வருகிறது.

சிவசக்திகள் அவ்வாறு கலந்து மகிழாவிட்டால், உலகில் எந்த ஓர் ஆணும் பெண்ணுமே கலந்து மகிழ இயலாது. அப்போது இனப்பெருக்கம் என்பதே ஏற்பட வழி இல்லாமல் போய்விடும். அதாவது, பிரம்மதேவனுல் சிருஷ்டித்தொழிலே செய்யமுடியாமல் போய்விடும். படைப்புத் தொழில் நடைபெற வேண்டும் என் பதற்காகவே, ஒரே பரம் பொருளாக இருந்த பரப்ரம்மமானது இரு கூறுகளை உடைய அர்த்தநாரீஸ்வராக முகிழ்த்து, பின்னர் அந்த இரு கூறுகளும் இருவேறு வியக்திகளாகப் பிரிந்து பரம சிவன் எனறும், பராம்பிகை என்றும் பெயர் பெற்று விளங்குகிறது.

## தவம் என்ருல் என்ன?

ஆனல், உலகம் படைக்கப்படுவது எதற்காக? உயிர்கள் தம்மைச் சூழ்ந்துள்ள பந்தங்களின்றும் விடுபட்டு, தம்முடைய

ஜீவபாவத்தை ஒழித்து சிவஸ்வரூபத்தை அடைவதற்கான சரியை, கிரியை, யோகம், ஞானம்,—அல்லது பிரத்யாஹாரம், தாரணை, தியானம், நிஷ்டை போன்ற முயற்சிகளில் ஈடுபடுவதற்கான ஒரு வாய்ப்பு அளிக்கப்படவேண்டும் என்பதற்காகவே உலகம் படைக்கப்படுகிறது என்பது, நமது சமய—தத்துவ நூல்களின் துணிபு. இத்தகைய முயற்சிகளில் உயிர்கள் ஈடுபடவேண்டுமாயின், அதற்கும் அந்தப் பராம்பிகை தான் வழிகாட்டி ஆகவேண்டும். அதாவது, உயிர்கள் தம் சிற்றின்ப வேட்கையிலிருந்து விடுபட்டுப் பரகதியை நோக்கி முயலவேண்டுமானால், முதலில் அவள் தன் கணவரை விட்டு விலகித் தவம் செய்ய வேண்டும். அவள் அப்படித் தவம் செய்யாவிட்டால், உலகில் எந்த ஒரு முனிவரோ பக்தரோ இறைவன்பால் தம் சித்தத்தைச் செலுத்த மாட்டார்கள். எனவே, பக்குவப்பட்ட உயிர்களை ஆத்ம சாதனைகளில் ஈடுபடுத்துவதற்காகவே, இறைவி தவம் செய்கிறாள் என்பது ஆகமங்களின் துணிபு.

இனி, தவம் என்றால் என்ன என்பதை நாம் சற்று சிந்தித்துப் பார்க்கவேண்டும். ''உற்ற நோய் நோன்றல் உயிர்க்கு உறுகண் செய்யாமை அற்றே தவத்திற்கு உரு'' என்கிறார் திருவள்ளுவர். அதாவது, வருகின்ற துன்பங்களைப் பொறுத்துக் கொள்ளுதல்.— அதே சமயத்தில், பிற உயிர்களுக்கு மனத்தாலும் துன்பம் இழைக்காமல் இருத்தல்: இதுவே தவத்தின்இலக்கணம். இதனையே ''ஸஹநம் ஸர்வ துக்காநாம் அப்ரதீகார பூர்வகம்'' என்கிறது ஆதிசங்கரரின் விவேக சூடாமணி. ஒரு துன்பம் வருமாயின், அதனைத் தடுத்துக் கொள்வதற்கான அல்லது போக்கிக் கொள்வதற்கான எந்த ஒரு முயற்சியும் செய்யாமல், அதை அப்படியே ஏற்று சகித்துக் கொள்வது என்பது அதன் பொருள்.

இந்த வாக்கியங்களின் சாரம் என்ன?

துன்பம் வேறு – தவம் வேறு அல்ல. துன்பத்தை மனமுவந்து ஏற்றுக் கொள்வதே தவம் எனப்படுவது. அந்தத்தவத்தினால் நாம் அடையக்கூடிய பயன்கள் யாவை என்பதையும், வள்ளுவர் பெருமான் அழகாகக் கூறியிருக்கிறார்.

### துன்பங்கள் நம்மை வாழ்விக்க வருகின்றன!

''ஒன்னார்த் தெறலும் உவந்தாரை ஆக்கலும் எண்ணில் தவத்தான் வரும்'

நமது பகைவர்களை வீழ்விப்பதற்கும் அன்பர்களை வாழ்விப்பதற்குமான பேராற்றல்கள், தவத்தினால் ஏற்படுகின்றனவாம்.

''கூற்றம் குதித்தலும் கைகூடும் நோற்றலின்

ஆற்றல் தலைப்பட்டவர்க்கு''

தவத்தினால் தம்முடைய ஆன்ம பலத்தினைப் பெருக்கிக் கொண்டவர்கள், மரணத்தையும் வென்றுவிடுவார்களாம்!

அதுமட்டுமல்ல. வாழ்வில் வறுமை படைத்தவர்கள் மிக அதிகமாகவும், செல்வம் படைத்தவர்கள் மிகக் குறைவாகவும் காணப்படுவதற்குக் காரணம் என்ன? வேறொன்றுமில்லை. உலகிலே தவம் செய்யாதவர்கள்தாம் மிகப் பெரும்பாலோராய் இருக்கிறார்கள். அதனாலேயே வறியவர்களும் மிகப்பெரும்பாலோராய் இருக்கிறார்கள். தவம் செய்பவர்கள் மிகவும் குறைவாக இருப்பதால் தான், செல்வர்களும் மிகக்குறைந்த எண்ணிக்கையிலேயே காணப்படுகிறார்கள் என்கிறது திருக்குறள். தவத்தின் வாயிலாகவே ஒருவன் செல்வத்தை அடைய முடியும் என்பது இதன் கருத்து. ''மேலைத் தவத்தளவே ஆகுமாம் தான் பெற்ற செல்வம்'' என்னும் ஔவையார்வாக்கு இதனை மேலும் உறுதிப்படுத்துகிறது.

நாமெல்லாம் உண்மையிலேயே செல்வத்தில் வேட்கை உடையவர்களாய் இருந்தால், அதை அடைவதற்குத் தவம் செய்வதைப் போன்ற சிறப்பான வழி வேறு எதுவுமே கிடையாது. நமக்குச் செல்வத்திலே ஆசை இருக்கிறது. ஆனால் தவம் செய்வதற்கு நாம் மனம் இல்லாதவர்களாய் இருக்கிறோம். மனம் இருந்தாலும், அதற்குரிய வழி நமக்குத் தெரியவில்லை. அதனாலேயே, வறுமையில் கிடந்து உழலுகிறோம்.

ஆனால, இறைவன் கருணாமூர்த்தி அல்லவா? நாம் பெரும் செல்வர்களாய்— அதே சமயத்தில் மரணத்தையும் வெல்லக் கூடிய ஆன்மீக வலிமை படைத்தவர்களாய் விளங்க வேண்டும் என்று அவர் ஆசைப்படுகிறார். அதன் பொருட்டே அவர் நமக்குப் பல்வேறு வகையான துன்பங்களைத் தருகிறார்.

அந்தத் துன்பங்களிலிருந்து தப்புவதற்கு நாம் என்ன என்னவோ முயற்சிகளைச் செய்கிறோம். சில சமயங்களில் அவற்றில் வெற்றியும் பெறுகிறோம். ஆனால் எவ்வகையிலும் தவிர்க்கமுடியாத துன்பங்கள் சில வரும்போது, அவற்றை நாம் சகித்துக் கொண்டே ஆகவேண்டியது இருக்கிறது. அவ்வாறு சகித்துக் கொள்ளும்போது, அதுவே நாம் செய்யும் தவமாக ஆகிவிடுகிறது! அந்த அளவுக்கு நம்முடைய ஆன்மீக வலிமையும் பெருகுகிறது.

எனவே, துன்பங்கள் நம்மைக் கெடுப்பதற்காக வருபவை அல்ல, நம்மை வாழ்விப்பதற்க்காகவே அவை வருகின்றன. துன்பங்களைப் பொறுத்துக் கொள்ளும் ஆற்றல் பெருகப் பெருக, நம்முடைய தவ வலிமையும் பெருகுகிறது. அந்த ஆற்றலை நமக்கு அருளுவதற்காகவே, அன்னைபரதேவதை அருந்தவம் புரிகின்றாள்.

**புண்ணிய ஸ்தலங்கள் என்றால் யாவை?**

நம் பாரத பூமியிலே எண்ணற்ற திருத்தலங்கள் இருக்கின்றன. அவற்றுள் பலவற்றிலே அன்னை தவம் செய்து அரனை மணந்து கொண்டதாகத் தலபுராணங்கள் கூறுகின்றன. அன்னை செய்த தவங்களுக்குள்ளேயே மிகக் கடுமையான தவம் மாங்காட்டுத் தவமே ஆகும்.

மாங்காடு என்பது சென்னையை அடுத்த பூவிருந்தவல்லிக்கு அருகே உள்ளது. அந்தப் பிரதேசத்தில் அக்காலத்திலே ஒருபெரிய

மாங்காடு இருந்திருக்கிறது. வடமொழியில் இதனை ஆம்ராரண்யம் என்பார்கள். (ஆம்ரம் என்றால் மாமரம். அரண்யம் என்றால்காடு. எனவே ஆம்ராரண்யம் என்றால் மாங்காடு)

துன்பத்தை வலியச் சென்று ஏற்றுக் கொள்வதே தவம் என்பதாக முன்பு கண்டோம். மாஞ்சோலைகள் நிறைந்த ஒரு காடு, அங்கு இருப்போருக்குக் குளிர்ச்சியான நிழல், இளந்தென்றல், சுவைமிக்க கனிகள், இனிய குயில் ஓசை, பச்சைப்பசேல் என்ற காட்சி, மாம்பூக்களின் நறுமனம், இன்னும் இவைபோன்ற சுகமான அனுபவங்களுக்கு இடமாக இருக்க முடியுமே அன்றி, துன்பங்களுக்கு நிலைக்களனாக இருக்க முடியாது பிறகு ஏன் அன்னை தான் தவம் செய்தற்கு உரிய இடமாக அதைத் தேர்ந்தெடுத்தாள்?

பூமிக்கு அடியில் நீரோட்டங்கள் இருக்கின்றன. ஆனால் ஒரு சில இடங்களில் மட்டுமே இனிய நீர் ஊற்றுக்களை உடைய கிணறுகள் அமைகின்றன. அதேபோல் நம் பாரத தேசத்திலும், ஒருசில இடங்கள் மிகச்சிறப்பான தெய்விகத்தன்மை பொருந்தியவையாக விளங்குகின்றன. அவற்றைத்தான் நாம் புண்ணியஸ் தலங்கள் என்று சொல்கிறோம்.

தவம் செய்பவர்களுக்கு எளிதில் சிறப்பான பலன்களைத் தரக்கூடியவை மேற்கூறிய புண்ணியஸ்தலங்களே ஆகும், பூலோகத்திற்குத்தவம் செய்ய வருகிற தேவர்களும், தம்முடைய தவம் எளிதிலே சித்தியாவதற்கு, அம்மாதிரி ஸ்தலங்களைத்தான் தேர்ந்து எடுப்பார்கள். அவர்கள் வந்து தவம் செய்வதால் அந்த ஸ்தலங்கள் மேலும் சிறப்பு அடைகின்றன. இறைவன் அவர்களுக்காக வந்து காட்சி கொடுக்கும்போது, அந்தச்சிறப்பு மேலும் கூடுதலாகிறது. அத்தகைய பெருஞ்சிறப்பு வாய்ந்த இடங்கள் தாம் பிற்காலத்தில் பக்த கோடிகளை ஈர்க்கின்ற திருவருட் பொலிவோடு திகழ்கின்றன.

மாங்காடு இன்று அப்படித்தான் விளங்குகிறது. அன்னை காமேஸ்வரி தவஞ் செய்ததால் அந்தத் தலத்திற்குக் கிடைத்த ஓர் அருஞ்சிறப்பு இது எனினும், அவள் தவம் செய்வதற்கு முன்னமேயே அந்தத்திருத்தலம் ஒரு புண்ணிய பூமியாகவிளங்கியிருக்க வேண்டும். பார்கவர், மார்க்கண்டேயர் போன்ற மஹரிஷிகளெல்லாம் அதற்கு முன்பே அங்குவந்து தவம் செய்திருக்கிறார்கள். அதனால்தான் அன்னை பராசக்தியும் அந்த இடத்தைத் தேர்ந்தெடுக்தாள் போலும்.

## கடவுளை நாம் ஏன் காணமுடிவதில்லை?

ஸ்ரீபுரத்திலிருந்து புறப்பட்ட லலிதாம்பிகை மாங்காட்டுக்கு வந்து ஒரு சாதாரண மானிடச் சிறுமிபோல வடிவெடுத்து விளங்கினாள். மக்களின் நடமாட்டம் அவ்வளவாக இல்லாதகாரணத்தால், அவள் அமைதியாக அமர்ந்து இறைவனை தியானம் செய்வதற்கு அது ஏற்ற இடமாகத் தோன்றியது. ஆனால் அரும்பாக இருந்த ஒன்று மலராக விரிந்தவுடன் அதனுடைய மணத்தால்

ஈர்க்கப்பட்டு எங்கிருந்து எல்லாமோ வண்டுகள் வந்து சேருவது போல்,தேவியின் இயல்பான திருவருட் பிரகாசமானது புண்ணிய ஆத்மாக்களை யெல்லாம் அவளை நோக்கி ஈர்க்கலாயிற்று. அவர்கள் தம்மையும் அறியாமல், ஏதோ ஓர் உள்ளுணர்வால் உந்தப்பட்டவர்களாய் மாங்காட்டுக்கு வந்தனர். அங்கு ஒருசிறுமி வடிவத்தில் காட்சி அளிக்கும் ஸ்ரீஜகதம்பிகையின் தவக்கோலத்தைக்கண்டுபேசொணுப் பெருவியப்பும் மகிழ்ச்சியும் அடைந்தனர். அந்தக் காட்சியானது அவர்களது ஆன்மாவிலே ஒருபுதிய மறுமலர்ச்சியைத் தோற்றுவிப்பதாய் இருந்தது. அவளது கடைக்கண் பார்வை பட்ட மாத்திரத்திலேயே, தீராத நோயாளிகளும்தம் பிணிதீர்ந்து நலமடைந்தனர். வறுமையால் வாடியவர்களின் வாழ்வு செழுமை அடைந்தது. ஊமைகள் பேசும் சக்தியைப் பெற்றனர். குருடர்கள் கண்ணொளி பெற்றனர். செவிடர்கள் தம் செவிடு நீங்கி மகிழ்ந்தனர். முடவர்கள் தம் முடம் நீங்கி நடமாடினர். தீயவர்களும் கூடத்தம் தீப்பண்புகாள் நீங்கப் பெற்று, நல்லவர்களாக மாறினர். இப்படிப் பல்வகையான அற்புதங்கள் அம்பிகையின் சன்னிதியில் அனுதினமும் நிகழலாயின.

இந்த அதிசயச் செய்தி முதலில் பக்கத்து ஊர்களில் பரவி, பிறகு நெடுந்தொலைவிலுள்ள நாடுநகரங்களுக்கும் எட்டலாயிற்று. அப்புறம் கேட்க வேண்டுமா? பாலயோகினியாய்த் தவம் செய்து கொண்டிருந்த பராம்பிகையின் தரிசனத்தைப் பெறுவதற்காக, மக்கள் நாலாதிக்குகளிலிருந்தும் மாங்காட்டில் வந்து குழுமலாயினர். அங்கு தனிமையை நாடிவந்த பரதேவதை தன் கண்திறக்கும் காலத்தை எதிர் நோக்கிக் காத்திருக்கின்ற ஒரு ஜன சமுத்திரத்தால், தான் அல்லும் பகலும் சூழக்பட்டு இருப்பதைக் கண்டாள். ''தாயே! கருணாகரி! எங்களைக் காப்பாற்று, அம்மா!'' என்ற கோஷங்கள் வானைப் பிளக்கும் போது, அவளால் எப்படி தியானம் செய்ய முடியும்?

வேறுவழியில்லாமல் அவள் அந்த மக்கள் கூட்டத்தின் கண்களுக்குப் படாமல், திடீரென்று மாயமாய் மறைந்தாள்.

கடவுள் ஏன் நம் கண்ணெதிரே காட்சி தருவதில்லை என்பது இப்போது விளங்குகிறது அல்லவா? கடவுள் நம்மில் ஒருவராக நடமாடித் திரிவாரேயானால், அவரை நாம் சொல்லொணாத தொல்லைகளுக்கு ஆளாக்கி விடுவோம்.

கடவுள் நம்மோடு வந்து கலந்து பழகுவாராயின், ஒன்று, நாம் அவரைப் புரிந்துகொள்ளாமல் துன்பப் படுத்துவோம்; அல்லது, புரிந்து கொண்டு தொல்லைப் படுத்துவோம், இவ்விரண்டில் ஒன்றைத் தவிர நமக்கு வேறு எதுவுமே தெரியாது.

## 6. ஸ்ரீ தவக்காமாட்சியின் திவ்ய சரிதம் III

தேவி மறைந்தவுடன், அவளைச் சூழ்ந்து இருந்த திரளான மக்கள் ஏமாற்றத்துக்கு ஆளாயினர். அவள் மீண்டும் வருவாள்

என்று பலர் அங்கேயே காத்திருந்தார்கள். ஆனல், நாட்கள் பல ஆகியும் அவள் வராமல் போகவே, இனி அவளைத் தாம் காணப்போவதில்லை என்ற முடிவுக்கு வந்தவர்களாய், அவர்களும் மனச்சோர்வுடன் தத்தம் ஊர் திரும்பிச் சென்றனர். ''தேவி இப்போது மாங்காட்டை விட்டு மறைந்து விட்டாள்!'' என்னும் செய்தி நாடு எங்கும் பரவலாயிற்று. அதன் பிறகு மக்கட் கூட்டம் அங்கு வருவதும் நின்று போயிற்று.

ஆனல் அம்பிகை அந்த மாங்காட்டை விட்டு வேறு எங்குமே சென்று விடவில்லை. அவள் அந்த மாங்காட்டிலே தான் இருந்தாள். அங்கு ஒரு பிலத்துவாரத்தை உண்டு பண்ணிக்கொண்டு, அதனுள்ளே போய் அமர்ந்து. உலகினர் எவர் கண்ணிலும் படாமல் அவள் கரந்து உறைந்து தவம் இயற்றினள்.

மாங்காட்டுக்குச் சிறிது தொலைவில் கோவூர் என்ற ஓர் ஊர் இருக்கிறது. அந்த ஊரைச் சேர்ந்த பசுக்கள் நாள்தோறும் மாங்காட்டுப் பகுதியில் வந்து மேய்ந்து செல்வது வழக்கம். அவற்றுள் கோவூர் சிவாலயத்திற்குச் சொந்தமான காராம் பசுவும் ஒன்று. அந்தப் பசுவின் பாலைக்கொண்டு நாள்தோறும் சிவலிங்கத்திற்கு அபிஷேகம் செய்வது வழக்கம். வேறு எந்தக் காரியத்திற்கும் அந்தப் பாலை யாரும் பயன் படுத்துவதில்லை.

ஒருநாள் கோயிலைச் சேர்ந்த பணியாள் ஒருவர் அந்தக் காராம் பசுவைக் கறக்க முற்பட்டபோது, அதனுடைய மடியானது ஒரு சொட்டுப் பால்கூட இல்லாமல் வறண்டு போயிருப்பது தெரிய வந்தது. பசுவின் பாலை யாரோ திருட்டுத்தனமாகக் கறந்து விட்டார்கள் என்று தீர்மானித்துக் கொண்டு, அன்று அவர் சும்மாயிருந்து விட்டார். ஆனல் மறுநாளும் இதே மாதிரி பால் இல்லாமல் போகவே, கோயில் அருச்சகர்கள் ஆத்திரம் அடைந்தனர். மாடுமேய்ப்பவனைக் கூப்பிட்டுக் கேட்டபோது, அவனும் அதன் காரணம் புரியாமல் திகைப்புற்று நின்றான்.

இப்படியாகத் தொடர்ந்து பல நாட்கள் காராம் பசுவினிடத்தே பால் இல்லாமல் போனவுடன், உண்மையிலேயே அது பால் வற்றிப்போய் வறட்டுமாடு ஆகிவிட்டது போலும் என்று எல்லோரும் முடிவு கட்டிவிட்டார்கள். பின்னர் அதை அவர்கள் மறந்தும் விட்டனர்.

ஒருநாள் அந்தப் பசுவை மேய்க்கும் இடைச் சிறுவன் ஓடோடியும் வந்து, கோயில் குருக்களிடத்திலே ஒரு வியப்பான செய்தியைத் தெரிவித்தான். அதாவது, மாங்காட்டில் உள்ள ஒரு பிலத்துவாரத்திற்கு மேலே நின்று கொண்டு, அந்தக் காராம் பசு தன் மடியிலுள்ள பால் அனைத்தையும் அந்த பிலத்துவாரத்திற்குள்ளே பொழிந்து கொட்டுவதைத் தான் கண்ணாரக் கண்டதாக அவன் தெரிவித்தான். அந்த பிலத்துவாரத்திற்குள்ளே அப்படி என்ன இருக்கிறது என்று அவன் அருகில் போய் எட்டிப் பார்த்தபோது, அங்கே ஒரு கன்னிப் பெண் உட்கார்ந்து தவம் செய்து கொண்டு இருப்பதை அவன் கண்டானம். சிவனுடைய அபிஷேகத்திற்கு உரிய தன் பாலை,

அந்தக் காராம் பசு நாள்தோறும் அவளுக்குத்தான் அபிஷேகம் செய்து வந்திருக்கிறது என்ற உண்மை அப்போதுதான் அந்த அருச்ச கர்களுக்குப் புலப்பட்டது.

**பஞ்சாக்கினி என்ருல் என்ன?**

எனினும், மாடு மேய்ப்பவன் கூறிய அந்தச் செய்தி உண்மை தாளு என்பதை சோதித்துப் பார்ப்பதற்காக, மறுநாள் அந்த அருச்சகர்கள் தாமே அந்தப் பசுவுக்குத் தெரியாமல் அதனைப் பின் தொடர்ந்து சென்று கவனித்தனர். சிறுவன் கூறியபடியே, அந்த மாடு ஒரு மாமரத்தின் அடியில் போய் நின்று கொண்டு, தன் பால் முழுவதையும் கீழே உள்ள பிலத்தினுள் பொழிவதை அவர்கள் கண்ணுரக் கண்டார்கள். அவர்கள் பெரும் வியப்பு அடைந்து, அந்த பிலத்தின் அருகே சென்று உள்ளே எட்டிப் பார்த்தபோது, காராம் பசுவின் பாலினுல் அபிஷேகம் செய்யப் பட்ட நிலையில் ஒரு கன்னிப் பெண் அங்கு உட்கார்ந்து இருப்பது தெரியவந்தது. சிவனுக்குரிய பாலை, அவனுக்குச் சொந்தமான காராம் பசுவே வலியச் சென்று ஒரு சிறு பெண்மீது பொழிய வேண்டுமானுல், அவள் நிச்சயம் அம்பிகையாகத்தான் இருக்க வேண்டும் என்ற முடிவுக்கு அவர்கள் வந்தனர். உடனே, உள் ளத்தில் பக்தி வெள்ளம் கரைபுரண்டோட, அவர்கள் ''ஜய ஜய ஜகந்மாதா!'' என்று கோஷமிடத் தொடங்கிவிட்டனர்.

இந்தச் செய்தி ஊர் எங்கும் பரவலாயிற்று. அப்புறம் மக்கள சும்மா இருப்பார்களா? பிலத்தினுள் தவமியற்றும் அம் பிகையை தரிசிப்பதற்காக, அவர்கள் மீண்டும் மாங்காட்டை நோக்கிப் படையெடுக்கத் தொடங்கிவிட்டனர். தனிமையை நாடி பிலத்தினுள் புகுந்த பரதேவதை, அங்கேயும் அந்தத் தனிமை பறிபோவதைக் கண்டாள். இனி என்ன செய்வது? மக்கள் கூட்டத்திற்குப் பயந்து மாங்காட்டை விட்டே போய் விடுவதா? எங்கு போனுலும் அங்கும் இப்படித்தானே மக்கட் திரள் வந்து மொய்க்கக் கூடும்?

ஆகையால், அவள் ஒரு யுக்தி செய்தாள். அதாவது, அந்த பிலத்துவாரத்திற்கு உள்ளேயே அவள் பஞ்சாக்கினியை மூட்டி, அதன் நடுவில் நின்று தவம் செய்யத் தொடங்கினுள். இந்த இடத்தில் இன்னெரு முக்கியமான உண்மையை நாம் தெரிந்து கொள்ளவேண்டும்'

பஞ்சாக்கினி என்ருல், ஐந்து அக்கினி என்று பொருள்படும். நான்கு திசைகளிலும் நான்கு அக்கினி குண்டங்களையம், அவற் றின் நடுவே ஓர் அக்கினிக்குண்டத்தையும் கொண்டது பஞ்சாக் கினி எனப்படுவது. நடுவே உள்ள அக்கினிகுண்டத்தின் அருகே நின்று அல்லது அமர்ந்து தவம் செய்த முனிவர்களைப் பற்றி நாம் புராணங்களில் காணலாம். ஆனுல் அவர்கள் மூட்டிய பஞ்சாக் கினி வேறு, தேவி தவம் செய்த பஞ்சாக்கினி வேறு.

**சுடாத ஒரு நெருப்பு உண்டு**

அக்கினியில் இரண்டு வகைகள் உண்டு. ஒன்று, ஸ்தூல அக்கினி; மற்றென்று, ஸூக்ஷ்ம அக்கினி.

நாம் கண்ணால் காண்கிற—நமது சமையலுக்கும், பொருட்களைச் சுட்டு எரிப்பதற்கும் பயன்படுகிற நெருப்புக்கே -ஸ்தூல அக்கினி என்று பெயர்.

ஸூக்ஷ்ம அக்கினியை நாம்கண்ணால் காண முடியாது. ஆனால், அதன் சக்தியை உணர முடியும்.உதாரணமாக, நமக்கு ஏற்படுகிற பசிகூட, ஜாடராக்கினி என்ற ஓர் அக்கினியின் ஸ்வருபம் தான். அந்த அக்கினியானது எதையும் சுட்டெரிப்பதில்லை. ஆனால், நாம் உண்ணும் உணவைப் பக்குவப்படுத்தி ஜீரணிக்கச் செய்கிறது. நாம் உயிர் வாழ்வதற்கே அது இன்றியமையாததாய் இருக்கிறது.

ஜாடராக்கினியை நாம் கண்ணால் பார்க்க முடியாது. எனினும்,பசி வடிவத்தில் அதனை நம்மால் உணரமுடிகிறது. அதே போல், ஸூக்ஷ்ம அக்கினியையும் நம்மால் பார்க்க முடியாது. எனினும், அதன் செயலை நம்மால் உணர முடியும். இந்த ஸூக்ஷ்ம அக்கினிக்கே ரூபதன்மாத்திரை என்று பெயர். மானஸிகமானபஞ்ச பூஜையில்,இந்த ரூபதன்மாத்திரையைக் கொண்டுதான்நம்முடைய இஷ்ட தெய்வத்திற்கு நாம் தீபம் காட்டி வழிபடுகிறோம். இந்த விஷயத்தை உபாசகர்கள் நன்கு அறிவார்கள்.

சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் என மொத்தம் ஐந்து தன் மாத்திரைகள்உண்டு. இவற்றிலிருந்துதான், முறையே, வான், வளி,அனல்,புனல், மண் என்னும் பஞ்ச பூதங்களும் தோன்றின. அதனால்இவற்றை ஸூக்ஷ்ம பூதங்கள் என்று சொல்வார்கள். இவை ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு பீஜாட்சரம் உண்டு. ரூபதன்மாத்ரைக்கு உள்ள பீஜாட்சரம் ரேபம் எனப்படுகிற ''ரம்'' என்பதாகும். இந்த பீஜாட்சரத்தை நாம் முறைப்படி ஒலி எழுப்புவோமானால், அவ்விடத்திலேரூபதன்மாத்திரை எனப்படுகிற ஸூக்ஷ்ம அக்சினி வெளிபபட்டு விளங்குகிறது என்பர் யோக நூல் வல்ல பெரியோர்கள்.

ஸூக்ஷ்ம அக்கினிக்கும் ஸ்தூல அக்கினிக்கும் இன்னொரு அடிப்படை வேறுபாடும் உண்டு. ஸ்தூல அக்கினியானது பொருட்களை எரித்து அழித்து விடும். ஆனால் ஸூக்ஷ்ம அக்கினி அப்படி எரிக்காது. அதுமட்டுமல்ல.ஸதூல அக்கினியைத் தண்ணீரால்அணைத்து விடலாம். ஸூக்ஷ்ம அக்கினியை அவ்வாறு அணைக்க முடியாது. காரணம்,ஸூக்ஷ்ம அக்கினியிலிருந்து ஸூக்ஷ்ம ஜலம் எனப்படுகிற ரஸதன்மாத்திரை தோன்றுகிறது. அந்த ரஸ தன் மாத்திரையே நாம் பருகுகிற தண்ணீராகப் பரிணமிக்கிறது.அதாவது,நெருப்பை அணைப்பதற்கு உதவி புரிகிற தண்ணிரின் மூலப்பொருளே,ஸூக்ஷ்ம அக்கினியிலிருந்து தான்உற்பத்தியாகிறது.அப்படியிருக்க, அந்தத் தணணீராலே ஸூக்ஷ்ம அக்கினியை எப்படி அணைக்க இயலும்?

பரதேவதைக்கு யோகீஸ்வரி என்றும்,யோகேஸ்வரி என்றும் இரண்டு திருநாமங்கள் உண்டு. யோகீஸ்வரி என்றால்,யோகியர்க்கெல்லாம்தலைவிஎனப்பொருள்படும்.யோகேஸ்வரிஎன்றால், யோகக் கலைக்கே அதிதேவதை எனப் பொருள்படும். எனவே,தன்னுடைய யோக சக்தியால்,அவள் தான் அமர்ந்திருந்த பிலத்துவாரத்தின் உள்யேயே ஸூக்ஷ்ம அக்கினி எனப்படுகிற ரூபத ன் மாத்திரையாலாகிய ஐந்து அக்கினி குண்டங்களை அமைத்துக் கொண்டாள்.

அவற்றுள் நடுவே இருந்த குண்டத்தின் மீதுநின்று. அவள்தவம் புரியத் தொடங்கினாள்.

ஜாடராக்கினியானது நம்வயிற்றைச் சுட்டெரித்துவிடுவதில்லை. அதற்குப்பதிலாக அதுபசியைஎழுப்புகிறது. அதே போல், அம்பிகை எழுப்பிய பஞ்சாக்கினியானது மாங்காட்டைச் சுட்டெரிக்கவில்லை. அதற்கு பதிலாக, அவளது தவத்தின் தனிமைக்கு ஊறுவிளைவிக்கக் கூடிய மக்கட் கூட்டத்தை, அந்த எல்லைக்குள்ளேயே புகவொட்டாமல் அது தடுத்து நிறுத்தியது.

ஸ்ரீலலிதாம்பிகையின் பரிவாரதேவதைகளில், ஜ்வாலாமாலினி என்ற ஒரு தேவிஉண்டு சாதாரணமாக, உபாசகர்கள் பூஜை தியானம் முதலியவற்றைச் செய்ய முற்படும்போது, அந்த தேவதையின் மந்திரத்தைச் சொல்லி, தம்மைச் சுற்றிலும் ஒரு நெருப்பு ஜ்வாலை வளையமிட்டு இருப்பதாக பாவித்துக்கொள்ள வேண்டும் என்பதுவிதி. அவ்வாறு பாவித்துக்கொண்டால், அந்தப்பூஜைக்கோ தியானத்திற்கோ ஊறுவிளைவிக்கக்கூடிய சக்திகள். உபாசகனை அணுகமாட்டா என்பது ஐதிகம். ஜ்வாலாமாலினிஎன்றால், ஜ்வாலைகளால் ஆகிய ஒரு மாலையின் வடிவமானவள் என்பது பொருள்.

அம்பிகை வளர்த்த பஞ்சாக்கினியோடு, இந்த ஜ்வாலாமாலினியின் அனல் வளையமும் சேர்ந்து, அந்தப்பிரதேசத்திற்குள் யாருமே அணுகவொட்டாமல் காத்து நின்றன. அதன் பிறகு தான் தேவியும் தன்தவத்திலே ஏகாக்ர சித்தத்தோடு பூரணமாக ஈடுபட முடிந்தது.

**காத்துக் கிடந்தான் காமேஸ்வரன்.**

பஞ்சாக்கினியின் நடுவே உள்ள அக்கினி குண்டத்தில் தன் இடதுகால் பெருவிரலை ஊன்றி, வலதுபாதத்தை நாபிக் கமலத்தில் பொருந்த வைத்து, இடது கையால் இருதய ஸ்தானத்திலே சின்முத்திரை பிடித்து, ஜபமாலை தாங்கிய வலது கையை சிரசின் மேல் உயர்த்தியவாறு, நெற்றியில் திரிபுண்டரமாகவிபூதி அணிந்து, கண்களின் பார்வையை வெளிச்செல்லவிடாது தடுத்து, சித்தத்தை அந்தர்முகப்படுத்தி, பஞ்சாட்சரீ வஹாமந்திரத்தின் லட்சியார்த்தத்தைக் தன்னுள் அபரோட்சமாக தரிசித்தவாறு, மரவுரிதரித்த ஜடா தாரிணியாக நிஷ்டை கூடி நின்றாள் பராம்பிகை.

அத்தகைய நிஷ்டை கூடிவிட்டால், சாதாரண யோகியர்களுக்கே அவர்களுடைய இருதயாகாசத்தில்உள்ள சச்சிதானந்தப் பரம்பொருள், தன்னைச் சூழ்ந்திருந்த மறைப்புகள் அனைத்தும் நீங்கி, சுடர்விட்டு ஒளிரத் தொடங்கி விடுகிறது. அப்படியிருக்க, பரதேவதையான காமேஸ்வரி விஷயத்தில் கேட்கவாவேண்டும்? அவள் தன் நாயகனான காமேஸ்வரனைத் தன் உள்ளத்தில் தரிசித்தாள். ''சிவபெருமானே! இம்மையே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்'' என்று மாணிக்க வாசகர் கூறியது போல, அவனை அவள் சிக்கெனப் பிடித்துக் கொண்டாள் அவளது உள்ளத்தினுள்ளே அவ்வாறு சிறைப் பட்டுப் போனவன், வெளியே அவ்வளவு எளிதாக வந்து காட்சி கொடுத்துவிட முடியுமா?

துருவஸ்வாமி இப்படித்தான் தன் உள்ளத்தினுள்ளே திருமாலைச் சிறைப்படுத்தி விட்டார். நாரத முனிவர் கூறியவாறு,

திருமாலின் எழில் மிகுந்த திருக்கோலத்தை அவர் தம் உள்ளத்தினுள்ளேயே தரிசித்து, அந்த திவ்ய ஸௌந்தர்யக் காட்சியிலே அவர் பரிபூர்ணமாக லயம் அடைந்து விட்டாராம். அந்த நிலையில், அவருடைய தவத்திற்கு மகிழ்ந்து அவருக்கு வரம் கொடுப்பதற்காகத் திருமால் அவர் எதிரே வந்து நின்றாராம். ஆனல், வெளிப்பார்வையே இல்லாதிருந்த துருவஸ்வாமிக்கு அது தெரியவில்லை. அவர் தாமாகக் கண்ணைத் திறக்கமாட்டார் என்பதை அறிந்த திருமால், தம்முடைய சங்கினாலே அவரது கன்னத்தை இலேசாகத் தீண்டினாராம். அதன் பிறகு துருவஸ்வாமி கண் விழித்துப் பார்த்து, தம் எதிரே நின்ற திருமாலை வணங்கி வாழ்த்தினாராம். இது ஸ்ரீமத் பாகவதத்திலே காணப்படுகிற செய்தி.

ஆனல், அம்பிகை செய்தது காமேஸ்வரனுடைய ரூப ஸௌந்தர்யத்தைப் பற்றியோ, அல்லது குணஸௌந்தர்யத்தைப் பற்றியோ உள்ள தியானம் அல்ல. இவ்விரண்டையும் கடந்த அவனது நிர்குண நிஷ்கள ஸ்வரூபத்திலே இரண்டறக் கலந்து விட்ட நிர்விகல்ப நிஷ்டை அது. அந்த நிஷ்டை பல்லாயிர வருடங்களுக்குக் கூட நீடித்திருக்கலாம். அது தானாகவே கலைந்தால் அன்றி, அதனை வேறு எவராலும் கலைத்துவிட முடியாது. எனவே, அவளது தவத்திற்கு இரங்கி வரம் அளிக்க வந்த காமேஸ்வரன் கூட, அந்த நிஷ்டை கலைவதற்காக நெடுங்காலம் காத்திருக்க வேண்டியதாயிற்று.

ஞானிகள் சமாதியில் இருந்தால், அவர்கள் எப்போது கண் விழிப்பார்களோ என்று பக்கத்திலேயே காத்து நிற்பாராம் பரமேஸ்வரன். ஏன்? கண் விழித்தவுடன் அந்த ஞானிக்கு உணவோ, மற்ற எதுவோ தேவைப்படுமாயின், அதனை உடனடியாக வழங்குவதற்காக!

ஞானிகளுக்கே அப்படியே என்றல், அம்பிகை காமேஸ்வரியைப் பற்றிக் கேட்க வேண்டுமா? அவள் எப்போது தன் நிஷ்டை கலைந்து கண் விழிப்பாள் என்று, மாங்காட்டில் வந்து காத்திருந்தான் காமேஸ்வரன்.

### வெள்ளீஸ்வரரும் வைகுண்ட நாதரும்

பொதுவாக, தேவி தவம் செய்யப் போனல், அந்தத் தவத்தின் இறுதியில் தேவன் அவளுக்குக் காட்சி கொடுப்பதும், பின்னர் இருவரும் திருமணம் செய்து கொள்வதுமே புராணங்களில் காணப்படுகிற மரபு. அந்த முறையில் ஸ்ரீபுரத்திலிருந்து காமேஸ்வரன் மாங்காட்டுக்கு வந்த போது, அவருடைய திருமணக் காட்சியைக் கண்டு களிக்கும் ஆவலோடு, தேவர்களும் மூவர்களும் அவர் கூடவே வந்திருந்தார்கள். ஆனல், தேவி அவரைத் தன் கண்ணைத் திறந்தே பார்ப்பதாய் இல்லை. பகவானின் கடைக்கண் பார்வைக்காக பக்தன் காத்திருப்பது என்ற நிலைமை மாறி, இப்போது பக்தையின் கடைக்கண் பார்வைக்காக பகவானே காத்திருக்க வேண்டிய நிலை ஏற்பட்டது. என்னே அம்பிகையின் திருவிளையாடல்!

மாங்காட்டில் ஏற்கெனவே பார்கவர் இறைவனை நோக்கித் தவம் செய்து கொண்டிருந்தார் என்பதை நாம் முன்னமேயே கண்டோம். நவக்கிரஹங்களில் ஒருவரும், அசுரர்களின் குல குருவும் ஆன சுக்ராச்சாரியரே பார்கவர் எனப்படுபவர். அவர் பிருகு முனிவரின் புதல்வராகையால், அவருக்கு பார்கவர் என்று பெயர் வந்தது. மாங்காட்டுக்கு வந்த காமேஸ்வரன், அந்த பார்கவரின் தவத்திற்கு மகிழ்ந்து அவருக்குக் காட்சி கொடுத்தருளி, அவரது பூஜையையும் ஏற்றுக் கொண்டார். பார்கவரால் வழி பாடு செய்யப்பட்ட காரணத்தால், பார்கவேஸ்வரர் என்ற திருப் பெயரோடு இறைவன் மாங்காட்டிலே கோயில் கொண்டிருக் கிருர்.

சுக்ரனைத் தமிழில் வெள்ளி என்று சொல்வார்கள். எனவே, பார்கவேஸ்வரருக்கு வெள்ளீஸ்வரர் என்றும் பெயர் உண்டு. இந்த சிவாலயம் மாங்காட்டிலே ஸ்ரீதவக் காமாட்சியின்கோயி லுக்கு மேற்குப் புறத்தில் சிறிது தூரத்திலே அமைந்துள்ளது.

அதே போல், அம்பிகையின் ஆலயத்திற்கு வடபுறத்திலே திருமாலின் திருக்கோயில் ஒன்றும் அமைந்துள்ளது. காமேஸ் வரியின் திருமணத்தை எதிர்நோக்கி மாங்காட்டுக்கு வந்த மஹா விஷ்ணு, அங்கு தம்மை நோக்கி நெடுங்காலமாய்த் தவம் செய்து கொண்டிருந்த மார்க்கண்டேயருக்குக் காட்சி கொடுத்து அருள்பாலித்தார். அந்த மூர்த்திதான் வைகுண்ட நாதர்என்னும் திருப் பெயரோடு அவ்வாலயத்திலே கோயில் கொண்டிருக்கிருர்.

திருமாலும் அம்பிகையும் அண்ணன்தங்கையர் எனப் பேசப் படுவது புராணங்களின் மரபு. சிவனுக்கும் அம்பிகைக்கும் எவ்வெப் போது திருமணம் நடந்தாலும், திருமால்தான் அவளை தாரை வார்த்துக் கொடுப்பது வழக்கம். அந்த முறையில் தமது கடமையை ஆற்றுவதற்காக, அம்பிகைக்குரியசீதனப் பொருட் களுடன் அவர் அங்கு காத்திருப்பதாக ஐதிகம். அந்தப் பொருட்களில் ஒன்ருகிய கணையாழியைக் கையிலேந்தியவாறு ஸ்ரீவைகுண்ட நாதர் இன்றைக்கும் அக்கோயிலிலே நமக்குக் காட்சி தந்து கொண்டிருக்கிருர்.

### கண் திறந்தாள் காமாட்சி

சாதாரணமாக, பெருமாள் கோயில்களிலே ஸ்ரீ கருடாழ் வார் தம் இறக்கையை விரித்தவாறு மண்டியிட்ட கோலத்தில் காட்சி அளிப்பது வழக்கம். பெருமாளை எந்த நேரத்திலும் அவர் விரும்பும் இடங்களுக்குச் சுமந்து செல்ல, கருடாழ்வார் ஆயத்தமாய் இருக்கும் நிலையினையே அது குறிப்பதாகும்.

ஆனுல், ஸ்ரீ வைகுண்ட நாதர் ஆலயத்திலே, கருடாழ்வார் தம் இறக்கைகளை ஒடுக்கிக் கொண்டு, சுகாசனம் இட்டாற்போல் தம் கால்கள் இரண்டையும் மடக்கிக் கொண்டு, மனிதர்கள் தரையில்உட்காருவதைப்போன்ற ஒரு நிலையிலே அமர்ந்திருக்கிருர். அதன் உட்பொருள் என்ன?

"பெருமாள் இப்போதைக்கு இவ்விடத்தை விட்டுக் கிளம்ப மாட்டார் போல் இருக்கிறது. பரதேவதை எப்போது கண்

விழிப்பாளோ! அவள் கண்விழிக்கும் வரையில் காமேஸ்வரனும் காத்திருக்கப் போகிறார். இந்த நிலையில் காமேஸ்வர காமேஸ்வரி திருமணம் எப்போது நடக்குமோ தெரியவில்லை. அது நடந்து முடியும் வரையில், நமது பெருமாளும் இவ்விடத்தை விட்டு நகரப் போவதில்லை. அது வரை நாம் ஏன் இறக்கையை விரித்துக் கொண்டு உட்கார்ந்திருக்க வேண்டும்?'' என்ற எண்ணத்தில் கருடாழ்வார் அப்படி ஒய்வாக அமர்ந்து விட்டாரோ என்று எண்ணத் தோன்றுகிறது அல்லவா?

இவ்வாறு தேவர்களும் மூவர்களும் எண்ணற்ற காலம் காத்திருந்த பிறகு, தேவி தன் நிஷ்டை கலைந்து கண் விழித்தாள். காமேஸ்வரனைக் கண்டாள். தன்னுடைய அளப்பரிய பெருந்தவம் பலித்துவிட்டது என்று ஆனந்த பரவசம் அடைந்தாள். அவனைத் தன் மனமொழி மெய்களால் வணங்கி வாழ்த்தினாள்.

தேவதேவனாகிய காமேஸ்வரனும் எல்லையில்லாத ஆனந்தக் கடலில் மூழ்கினான். பன்னெடுங்காலத்திற்குப் பிறகு அவளது கனியினும் இனிய சொற்களைக் கேட்டு அவன் செவி படைத்த பெரும் பயனைப் பெற்றான். அவளது சிரத்தாலும் கரத்தாலும் அவனது திருவடிகள் தீண்டப்பட்ட போது, அவன் மேனி படைத்த மெய்ப்பயனைக் கண்டான். அவளது மந்தகாசத்தின் தண்ணொளியால் தன் உள்ளம் குளிர்ந்த போது, அவன் கண்படைத்த கவின்பயனைப் பெற்றான். அவள் தரித்திருந்த மரவுரியையும் ஜடா பாரத்தையும் கண்டு, அவனது உள்ளம் குழைந்து உருகியது. இந்தக் கோலத்தோடு இவளை எப்படித் திருமணம் செய்து கொள்வது என்று எம்பெருமான் எண்ணினான் போலும்!

# 7. காஞ்சியில் சிவபூஜையும் கங்கைப் பெருவெள்ளமும்

மாங்காட்டில் காமேஸ்வரி தவம் செய்தாளே தவிர, சிவ பூஜை எதுவும் செய்யவில்லை. பூஜைவேறு, தவம்வேறு, பூஜை என்றால், அங்கே பூஜிக்கப்படுவதற்கு ஒரு சிவலிங்கம் இருக்க வேண்டும், மாங்காட்டில் அம்பிகை பூஜித்த லிங்கம் என்பதாக எதுவுமே கிடையாது. அவள் அங்கு கடுமையான தவம் மட்டும் தான் செய்தாள் என்று கொள்வது தவறாகாது.

தன்னைத் திருமணம் செய்து கொள்வதற்கு முதற்படியாக, காஞ்சிக்குச் சென்று சிவபூஜை செய்யுமாறு கட்டளையிட்டார் காமேஸ்வரர். அதற்கு இன்னொரு காரணமும் இருக்கலாம் என்பதாக ஸ்ரீ வித்யா உபாசகர்களான மஹான்கள் கூறுவார்கள்.

பரதேவதையான ஸ்ரீ லலிதாம்பிகைக்கு ''ஸ்வாதீநவல்லபா'' என்று ஒரு பெயர் உண்டு. தன்னுடைய அதீனத்தில் உள்ள கணவனை உடையவள் என்பது அதன் பொருள். அதாவது, கணவனாகிய காமேஸ்வரன்தான் அவளுக்குக் கட்டுப்பட்டவனும்! அவள் அவனுக்குக் கட்டுப்பட்டவள் அல்லளாம்.

அதேபோல், ''சிவபரா'' என்று இன்னொரு திருநாமமும் அவளுக்கு உண்டு. சிவனிலும் மேம்பட்டவள் என்பது அதன்

பொருள். இங்கே சிவன் என்பது கயிலாச பதியையும் குறிக்கலாம் அல்லவா? அந்த சந்தேகத்திற்கே இடம் இல்லாதபடி, ''காமேஸ்வர மஹேஸ்வரீ'' என்று அவளை வருணிக்கிறது ஸ்ரீ லலிதா த்ரிசதி ஸ்தோத்திரம். காமேஸ்வரனுக்கும் மேலான ஈஸ்வரி என்பது அதன் கருத்து.

### காமேஸ்வரனின் நெடுங்கால ஏக்கம்

''சிவாராத்யா'' என்ற இன்னொரு நாமமும் ஸ்ரீ லலிதா ஸஹஸ்ர நாம ஸ்தோத்திரத்தில் காணப்படுகிறது. சிவனால் பூஜிக்கப்படுபவள் என்பதே அதன் பொருளாகும். இப்படி அவளை யே எப்போதும் பூஜை செய்து கொண்டிருந்த காமேஸ்வரனுக்கு, அவள் தன்னை எப்போதாவது பூஜை செய்ய மாட்டாளா என்ற ஓர் ஏக்கம் நெடுங்காலமாக உள்ளூற இருந்து வந்ததாம். அந்த ஏக்கத்தைப் போக்கிக் கொள்வதற்கு, இந்தத் தருணத்தைப் பயன்படுத்திக் கொண்டாராம் காமேஸ்வரன்.

காமேஸ்வரனுக்கு அம்பிகை விஷயத்தில் இன்னொரு மனக் குறையும் உள்ளூற இருந்து வந்தது போலும். அது என்ன என்பதை நாம் பின்னால் காணப் போகிறோம். அதைப் போக்கிக் கொள்வதற்கும் ஆசைப்பட்டே, அவர் அவளைக் காஞ்சியில் போய்ப் பூஜை செய்யுமாறு கட்டளையிட்டார் என்று எண்ண வேண்டியதிருக்கிறது.

காஞ்சிக்கு அப்படி என்ன சிறப்பு என்று கேட்கத் தோன்று கிறது அல்லவா? பரதேவதை காஞ்சியில் போய் சிவ பூஜை பண்ணி, காமேஸ்வரனால் திருமணம் செய்து கொள்ளப்படுகிறாள். அதன்பிறகு அந்தத் திருத்தலத்திற்கு எண்ணற்ற பெருமைகள் ஏற்பட்டிருக்கலாம். ஆனால், தேவி அங்கு செல்வதற்கு முன்பாகக் காஞ்சியம் பதிக்கு இயல்பிலேயே ஏதேனும் மகத்துவம் உண்டா? உண்டு. எப்படியென்றால்,—

### காஞ்சியின் சிறப்பு

தக்கனுடைய யாகத்திற்குச் சென்ற ஸதீதேவியை அவன் அவமானப் படுத்தியது மட்டுமல்லாமல், அவளது பதியான பரமேஸ்வரனையும் நிந்தனை செய்தான். உடனே, அவனுடைய மகளாகப் பிறந்த சரீரத்தைத் தான் இனியும் தன்னுடையதாகத் தாங்கிக் கொண்டிருக்கக் கூடாது என்று தீர்மானித்த ஸதீதேவி, தன் யோகசக்தியால் பிராணனை ஒடுக்கி, அந்த யாக சாலையிலேயே தேகத்தைத் தியாகம் செய்து விட்டாள்.

இதைக் கேட்ட பரமேஸ்வரன் கடுஞ்சினம் அடைந்து, வீர பத்திரனை அனுப்பி, தக்கனையும் அவனது யாகத்திற்கு வந்திருந்த தேவர்களையும் தண்டிக்கச் செய்தார். பின்னர் தன் பத்தினியாகிய ஸதீதேவியின் மிருத சரீரத்தை (அதாவது, சடலத்தை)த் தன் தோளில் சுமந்து கொண்டு, ரௌத்ர தாண்டவம் புரியாலனார்.

அதனால் உலகங்கள் எல்லாமே அழிந்து விடும்போல் தோன்றியது, தேவர்களும் முனிவர்களும் எவ்வளவோ வேண்டிக் கொண்டும், அவர் தன் தாண்டவத்தை நிறுத்துவதாய் இல்லை. தேவியின் மிருத சரீரத்தைச் சுமந்து கொண்டிருக்கும் வரையில்

அவருடைய சீற்றம் தணியாதுஎன்று தெரிந்து கொண்ட திருமால், தன் சக்கரத்தால் அந்த சரீரத்தை ஐம்பத்தோரு துண்டுகளாக அறுத்து எறிந்தார். அதன் பிறகுதான் பரமேஸ்வரனுக்குக் கோபம் தணிந்தது. அவரும் தன் ஆட்டத்தை நிறுத்தினர்.

இந்த ஐம்பத்தொரு துண்டுகள் போய் வீழ்ந்த இடங்களே உலகில இன்று ஐம்பத்தோரு சக்தி பீடங்களாகக் காட்சியளிக்கின்றன. இவையே அகாரம் முதல் க்ஷகாரம் வரையிலான ஐம்பத்தோர் அட்சரங்களின் ஸ்தானங்களாகவும் விளங்குகின்றன. இவற்றுள் ஐ என்ற அட்சர வடிவான (ஸதீதேவியின்) நாபிக் கமலம் வீழ்ந்த இடமேகாஞ்சிஎனப்படுவது. இதற்குக் காமகோடி என்ற பெயரும் உண்டு.

தேவி பீடங்களில் மிகவும் சிறப்புவாய்ந்தவை நான்கு, அவை காமராஜ பீடம், பூர்ணகிரி பீடம், ஜாலந்தர பீடம், ஓட்யாண பீடம் என்னும் பெயர் உடையவை. இவற்றுள் காமராஜ பீடம் இன்றைய அஸ்ஸாம் மாநிலத்தில் இருக்கிறது. பூர்ணகிரி பீடம் இமாலயத்தில் இருக்கிறது. ஜாலந்தர பீடம் ஜலந்தரில் இருக்கிறது. ஓட்யாண பீடம் எனப்படுவதுதான் ஐகாரம் என்னும் அட்சர வடிவமாக உள்ள காஞ்சீபுரமாகும்.

இத்தகைய மகிமை வாய்ந்த பதியாக இருப்பதனுல் தான், காமேஸ்வரியை அங்குச் சென்று தன்னைப் பூஜை செய்யுமாறு ஆணையிட்டார் காமேஸ்வரன்.

## தேவியின் சிவபூஜை

தேவனின் கட்டளையைச் சிரமேற் கொண்டு, தான் தவம் செய்து கொண்டிருந்த பிலத்துவாரத்தின் உள்ளேயே புகுந்து மறைந்தாள் பர தேவதை. அப்படி மறைந்தவள் மீண்டும் ஒரு பிலத்துவாரத்தின் வாயிலாகவே பூமியில் வெளிப்பட்டாள். அவள்அவ்வாறு வெளிப்பட்ட இடம்தான் இன்று காஞ்சீபுரத்திலே ஸ்ரீகாமாட்சி அம்பிகையின் திருக்கோயிலாக விளங்குகிறது,

மாங்காட்டிலேயே ஸ்ரீகாமேஸ்வரியின் திருமணத்தைக் கண்டு களிக்கலாம் என்று ஆசையோடு வந்த தேவர்களுக்கும் மூவர்களுக்கும், இது பெருத்த ஏமாற்றத்தை அளித்தது. காஞ்சீபுரத்திலே அம்பிகை எவ்வளவு காலம் சிவபூஜை செய்வாளோ, இறைவன் அவளுக்கு எப்போது அருள்பாலிப்பாரோ என்றெல்லாம் அவர்கள் மனச் சோர்வு அடைந்தனர். சிவசக்தி திருமணத்தை எதிர்பார்த்து அவர்கள் வந்து காத்திருந்த இடமாகையால், இந்திராதி தேவர்கள், பிரம்மா விஷ்ணு உருத்திரர்கள் போன்ற எல்லாருடைய சாந்நித்தியமும் மாங்காட்டிலே இன்றைக்கும் விளங்கிக் கொண்டிருப்பதாக ஐதிகம்.

மாங்காட்டிலே எண்ணற்ற மாமரங்களுக்கு நடுவே இருந்து தவம் செய்தமையால், அந்த விருட்சத்தினிடத்தில் அம்பிகைக்கே ஒரு பிரீதி ஏற்பட்டு விட்டது போலும். எனவே காஞ்சீபுரத்தில் ஒரு மாமரத்தின் அடியிலேயே சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து அவள் பூஜை செய்யலானுள். அதனை ஸைகத லிங்கம் (அதாவது மணலினுல் ஆகிய லிங்கம்) என்று சொல்வார்கள். அந்த மாமரம் கூட அம்பிகையின் ஸ்வரூபமே என்பார்கள் மஹான்கள்.

அந்தலிங்கத்துக்குநாள்தோறும்வில்வமாலை சாத்தி,முளைத்தபயிற் றை நிவேதனம் செய்து அவள் இறைவனைஆராதித்து வந்தாளாம். அப்படி நெடுங்காலம் சிவபூஜை செய்தும் கூட, காமேஸ்வரன் அவளை நாடி வரவில்லையாம்.அதனால் அம்பிகை ஏக்கமுற்று இருக் கும் சமயத்தில், அங்கு நாரதர் வந்தார்.அவர் அம்பிகையின் நிலை கண்டு, "அம்மா! காமேஸ்வரர் எங்கு இருந்தாலும், அவரை உன்பால் ஈர்த்துக் கொண்டு வரக்கூடிய யுக்தி உனக்கே தெரியும். இருந்தாலும், நான் சொல்கிறேன் கேள்." என்று ஒரு மநதிரத் தைத் தீவிரமாக உபாசிக்குமாறு அவளுக்கு ஆலோசனை கூறினார்.

பஞ்சபாணேஸ்வரீகல்பலதா என்பது அந்தமந்திரத்தின்பெயர். ஸ்ரீவித்யா உபாசகர்கள் மட்டுமே இந்த மந்திரததை அறிவார் கள். இன்றைக்கும் பெண்மணிகள் இதை முறைப்படி உபதேசம் பெற்று ஜெபம் செய்வார்களாயின், அவர்களைப் பிரிந்து சென்று விட்ட கணவர், அவர்கள் பால் விரைந்தோடி வந்து ஒன்று கூடுவர் என்பது அனுபவ சித்தாந்தம்.

தழுவக் குழைந்த தம்பிரான்

நாரதர் ஆலோசனைப் படியே அம்பிகை அந்த மந்திரத்தை ஆறுமாத காலம் விடாது ஜெபம் செய்து வந்தாள். அதன் காரண மாக, காமேஸ்வரனுக்கே தாஙக முடியாத விரகதாபம் ஏற்பட்ட தாம்! அந்தத் தாபத்தைப் போக்கிக் கொள்வதற்காக, அவர் கங்கையின வெள்ளத்திலே மூழ்கிப் பார்த்தாராம். அப்போதும் காமாக்கினி தணியவில்லை. எனவே அவர் கங்கையைப் பார்த்து, "நீ காஞ்சிக்குச் சென்று காமேஸ்வரியின் ஜெப யக்ஞத்தைத் தடுத்து நிறுத்துவாயாக!" என்று கட்டளை யிட்டாராம்.

சிவபெருமானுடைய ரோமங்களிலே மூன்றைக் கோடி புண்ணிய தீர்த்தங்கள் இருப்பதாக ஐதிகம். அவை அனைத்தை யும் தன்பால் ஈர்த்துக் கொண்டு, ஊழிக் காலத்துப் பெரு வெள்ளம் போல வடிவெடுத்துக் காஞ்சியை நோக்கி வந்தாளாம் கங்காதேவி. வந்தவள், நந்திசயிலம் என்ற மலையை அடைந்து, அங்கிருந்து மஹாதேவி தவம் புரியும் இடத்தையே இலக்காகக் கொண்டு சீறிப்பாய்ந்தாள். பொங்கிப் பெருகிவந்த அந்த பயங் கரமான வெள்ளத்தைப் பார்த்து தேவி காமேஸ்வரியே நடுக்கம் அடைந்தாளாம். அதனால், அந்த நதிக்கு கம்பாநதி எனப்பெயர் வந்தது (கம்பம் என்ற வடசொல்லுக்கு நடுக்கம் என்று பொருள்).

உடனே காமேஸ்வரிதன் பூஜைக்குக் காவலாக நின்றகாளியை அழைத்து, அந்த வெள்ளத்தை பந்தனம் செய்யுமாறு கட்டளை யிட்டாள். அவ்வாறே காளியும் தன் கையில் இருந்த பான பாத்திரத்தின் உள்ளே, அந்த வெள்ளத்தைப் பிடித்து அடக்கி னாள்.

கபாலத்தினை (அதாவது, மண்டை ஓட்டினால்) ஆன அந்தப் பான பாத்திரத்திற்கு விஸ்வ பக்ஷணம் என்று பெயர். விஸ்வ பக்ஷணம் என்றால் உலகததையே தன்னுள் விழுங்கி விடக் கூடிய ஆற்றல் படைத்தது என்று பொருள் அத்தகைய மாபெரும் சக்தி படைத்த பான பாத்திரத்தினுள்ளே சற்று அடங்கினாற் போல்

காணப்பட்ட கங்கைப் பெருவெள்ளமானது, காமேஸ்வரனுடைய சங்கல்பத்தால் அதனையும் மீறி, முன்னிலும் அதிகமான உக்கிரத்தோடு வெளிப்பட்டு வரலாயிற்று.

அதைக்கண்டதும் அம்பிகை மேலும் அச்சம் அடைந்தவளாய், உலகத்திற்கே காவற் கடவுளாய் விளங்கும் ஸ்ரீமஹாவிஷ்ணுவைத் தன் மனத்தால் அழைத்தாள். உடனே அவர் வானமுகடு வரை ஓங்கி வளர்ந்த ஒரு மாபெரும் பருவதத்தைப் போல் தன்னை ஆக்கிக் கொண்டு, அந்த வெள்ளத்தை மறித்து நின்றார். ஆனால் அவரையும் மீறி வெள்ளம் பாய்ந்தோடி வந்தது.

வெள்ளத்தினால் தனக்கு ஆபத்து வந்து விடுமோ என்று அம்பிகை கவலைப்படவில்லை. ஆனால், தன் உயிருக்கும் உயிராக வைத்து வழிபாடு செய்யப்பட்டு வரும் சிவலிங்கததிற்கு ஆபத்து வந்துவிடக் கூடாதே என்றுதான் அவள் அஞ்சினாள். அது வெள்ளத்தினால் அடித்துச் செல்லப்படாமல் தடுப்பதற்கு வேறு ஒரு வழியும் தோன்றாதவளாய், அவள் அந்த லிங்கத்தையே தன் இருகைகளாலும் மார்புறக் கட்டி அணைத்துக் கொண்டாள். அவ்வளவுதான்! இறைவனது விரகதாபம் அறவே மறைந்து, அவனது அங்கமெல்லாம் குளிர்ந்து குழைந்தது.

இந்தக் காட்சியை தியானம் செய்யுங்கள்

தேவ தேவன் ஆனந்தமே தன் வடிவமாகக் உடையவன். ஆனால் அவனும் அடைவதற்கு ஆசைப்படுகிற ஆனந்தம் ஒன்று உண்டாம். அம்பிகையின் பஞ்சபாணேஸ்வரீ கல்பலதா மந்திர ஜபத்தால் அவனுக்குத் தாங்க முடியாத விரகதாபம் ஏற்பட்டபோது, அதைப் போக்கிக் கொள்வதற்கு அவன் வேறு ஒன்றும் செய்திருக்க வேண்டாம். பேசாமல் காஞ்சியம் திக்கு வந்து, அவளுக்குக் காட்சி கொடுத்து அவளை அழகாகத் திருமணம் செய்து கொண்டிருக்கலாம். ஆனால், தானே வலியச் சென்று அவளைத் தழுவி மகிழ்வதை விட, அவள் வலிய வந்து தன்னைத் தழுவுவதிலேயே தனக்கு அதிகமான ஆனந்தம் கிடைக்கும் மென்று அவன் ஆசைபபட்டான். அந்த ஆசையை நிறைவேற்றிக் ககாள்வதற்காகவே, அவன் கங்கையை அனுப்பி தேவியைக் எம்பமுறச் செய்தான்.

முன்பு இலங்கேஸ்வரனாகிய இராவணன் கயிலை மலையை வேரோடு பெயர்த்தபோது, பரமேஸ்வரனுக்கு இப்படி ஓர் இன்பானுபவம் ஏற்பட்டதாம். அதாவது, பார்வதி பயந்து நடுங்கிப் பரமனைப்போய்க் கட்டி அணைத்துக்கொண்டாளாம். அவள் அவ்வாறு வலிய வந்து அணைத்த சுகத்தைப் பரமன் அதற்கு முன்பு அனுபவித்ததே இல்லையாம். அதனாலேயே, தனக்கு அந்த சுகம் கிடைப்பதற்கு ஏதுவாக இருந்த இராவணன் மீது அவருக்கு அளவற்ற பிரியம்ஏற்பட்டு, அவனுக்கு ஒரு தெய்விக சக்தி வாய்ந்த வாளாயுதத்தைப் பரிசாக அளித்தாராம்.

கயிலாச பதிக்குக் கிடைத்த அந்த சுகானுபவம், தனக்கு இன்னும் கிடைக்கவில்லையே என்று காமேஸ்வரன் எவ்வளவு காலம் ஏங்கி இருந்தாரோ தெரியவில்லை. அந்த ஏக்கத்தைப் போக்கிக் கொள்வதற்கு இந்த வாய்ப்பினை அவர் மிகவும் அழகா

கப் பயன்படுத்திக் கொண்டார். இதற்காகத்தான் அம்பிகையை மாங்காட்டிலேயே திருமணம் செய்து கொள்ளாமல், அவளைக் காஞ்சிக்கு வந்து சிவபூஜை செய்யுமாறு அவர் கட்டளை இட்டாரோ என்னவோ, யார் கண்டது?

அம்பிகை தம்மை வலிய வந்து அணைத்தவுடன், அவரது உள்ளமும் உடலும் ஒருங்கே குழைந்தன என்று கூறப்படுவது வெறும் உபசார வழக்கு அல்ல. அவளால் அணைக்கப்பட்ட நிலையில், அவளது இரண்டு ஸ்தனங்களும் அவர் உடலிலே பதிந்து, அந்த தெய்விகத் திருமேனியில் இரண்டு பெரிய பள்ளங்களை உண்டு பண்ணி விட்டனவாம். அதேபோல் அவளது கை வளையல்கள் அழுந்திய இடத்திலும், அந்த வளையல்களைப் போன்ற ரேகைகள் மேனியில் அமைந்து விட்டனவாம். அப்படியானல் எம் பெருமானின் உள்ளமும் உடலும் அன்னையின் ஆலிங்கன சுகத்தால் எந்த அளவு உருகிப் போயிருக்க வேண்டும்!

இறைவனது இந்தத் திருவிளையாடலை தியானம் செய்பவர்களுக்கு, உத்தமமான இல்லற இன்பங்கள் அனைத்தும் எளிதிலே சித்திக்கும் என்பது ஆன்ருேரின் துணிபு.

தேவியின் ஆலிங்கனத்தால் தேவனின் காமாக்கினி ஒழிந்து, அவனுடைய திருமேனி குளிர்ந்தது. அந்தக் கணத்திலேயே கங்கையின் பிரவாகமும் தணிந்து அடங்கியது.

காமேஸ்வரரின் திருவிளையாடல்

அடுத்தபடியாக, அம்மையப்பரின் திருமணத்திற்கான ஆயத்தங்களில் தேவர்களும் மூவர்களும் தீவிரமாக ஈடுபட்டனர். அந்தத் திருமணம் எவ்வளவு விமரிசையாக நடைபெற்றது என்பதை விவரிக்க, ஆயிரம் நாப் படைத்த ஆதிசேடனுலும் இயலாது என்று புராணங்கள் கூறுகின்றன. அப்படியிருக்க, நம்மால் எப்படி அதை விவரிக்க முடியும்?

''ஸ்ரீ காஞ்சி மஹிமை'' என்னும் பழமையான நூலிலே, காமேஸ்வரனின் கண்களைக் காமேஸ்வரி பொத்தியதற்கு வேருெரு காரணமும் கூறப்பட்டுள்ளது.

ஸ்ரீபுரத்தில், காமேஸ்வரன் ஒருவர்தான் ஆண் வடிவத்தில் காட்சி அளிப்பவர். அங்குள்ள மற்ற எல்லாருமே பெண்கள்தான். பிரம்மா விஷ்ணு உருத்திரர்கள் கூட அதன் எல்லைக்குள்ளே சென்ருல் பெண்மைக் கோலத்தை அடைந்து விடுகிருர்கள் என்கிறது ஸ்ரீதேவி பாகவதம்.

அங்குள்ள பெண்கள் எல்லாம் ஸ்ரீ லலிதாம்பிகையின் பரிவார தேவதைகள் ஆவர். இவர்களுக்கு யோகினிகள் என்றும் பெயர் உண்டு. ஒவ்வொன்றும் அறுபத்து நாலு கோடி யோகினிகளைக் கொண்ட கூட்டங்கள் பல, அம்பிகையைச் சூழ்ந்து இருக்கின்றனவாம்.

இந்த யோகினிகள் எல்லாருமே அம்பிகையின் ஸாரூப்ய சித்தியைப் பெற்றவர்கள். அதாவது, அம்பிகையைப் போலவே வடிவழகையும் ஆயுதங்களையும் ஆடை ஆபரணங்களையும் பெற்ற

வர்கள். அம்பிகைக்கும் அவர்களுக்கும் ஒரே ஒரு வேறுபாடுதான் உண்டு. காமேஸ்வரரின் இடது துடையின் மீது கொலு வீற்றிருக்கும் உரிமை படைத்தவள் லலிதாம்பிகை; அந்த உரிமை யோகினிகளுக்குக் கிடையாது.

ஒரு சமயம் அந்த யோகினிகளுக்கு ஒரு தவறுன ஆசை ஏற்பட்டதாம். "தோற்றத்தில் நாமும் லலிதாம்பிகையும் ஒரே மாதிரியாகத்தானே இருக்கிறோம்? அப்படி இருக்க, இந்தக் காமேஸ்வரர் நம்மிடத்தில் மட்டும் ஏன் ஒர வஞ்சனையாக நடந்து கொள்ள வேண்டும்? நம்மையும் அவர் தன் மடியின் மேல் தூக்கி வைத்துக் கொண்டால் என்ன?" என்று அவர்கள் எண்ணினுர்களாம்.

அவர்களது கர்வத்தைப் போக்க, காமேஸ்வரன் ஒரு சிறிய திருவிளையாடல் புரிந்தாராம். அதாவது, அவர்கள் அத்தனை பேருடைய ஆடைகளும் திடீரென்று நழுவி விழுமாறு அவர் சங்கல்பம் செய்தாராம். அதனுல் நாணமும் அவமானமும் அடைந்தவர்களாய், யோகினிகள் அனைவரும் சட்டென்று தரையில் குப்புற வீழ்ந்து படுத்துக் கொண்டார்களாம். அவர்களது நிர்வாணக் கோலத்தைக் காமேஸ்வரன் பார்த்துவிடக் கூடாது என்பதற்காகவே, அப்போது அவர் கண்களைப் பொத்தினுளாம் காமேஸ்வரி.

ஆனுல் இவையெல்லாம் இந்த பாரத புண்ணிய பூமியிலுள்ள மக்கட் குலத்தை உய்விக்கும் பொருட்டுப் பாராம்பிகை ஸ்ரீபுரத்தைவிட்டு மாங்காட்டுக்கு வருவதற்காக ஏற்பட்ட வெறும் நிமித்தங்களே தவிர வேறு அல்ல என்பது மஹான்களின் துணிபு.

ஸ்ரீ நகரத்தில் ஸ்ரீ மஹாத்ரிபுர சுந்தரியாகவும் ஸ்ரீ புரத்தில் ஸ்ரீ ராஜராஜேஸ்வரி என்ற லலிதாம்பிகையாகவும் விளங்குகின்ற அதே பராசக்திதான், மாங்காட்டிலும் காஞ்சியிலும் காமாட்சி என்ற திருப்பெயரோடு காட்சியளிக்கிருள். மாங்காட்டிலே அவள் தவக் காமாட்சி; காஞ்சியில் அவளே கல்யாண காமாட்சி. இந்தக் காமாட்சியின் பிரபாவங்களைப் பற்றி விரிவாகப் பேசுகிற ஒரு பகுதி, மார்க்கண்டேய புராணத்திலே காணப்படுகிறது. அதற்குக் "காமாட்சி விலாசம்" என்று பெயர். அன்பர்கள் அந்நூலை படித்துப் பயன்பெற வேண்டும் என்பது அடியேனுடைய ஆசை.

காஞ்சியிலே காமாட்சியின் நாயகராகக் காட்சி அளிப்பவர் ஏகாம்ரநாதர். (இவரை ஏகாம்பரநாதர் என்றும் கூறுவார்கள்.) ஏகாம்ரநாதர் என்ருல், ஒற்றை மாமரத்தின் கீழ் வீற்றிருப்பவர் என்று பொருள்.

அடியார்களில் பலர் எண்ணுவதுபோல, இவர் கயிலாசபதியாகிய பரமசிவன் அல்லர். ஸ்ரீநகரத்திலும் ஸ்ரீபுரத்திலும கோயில் கொண்டு இருக்கும் காமேஸ்வரரே இங்கு ஏகாம்ரராக விளங்குகிருர் என்பது கருத்திற் கொள்ளத்தக்கது.

# 8. காலடிமுனிவரும், காஞ்சிமுனிவரும்

வேதத்திலே அத்வைதம் என்றஒரு சொல் வருகிறது. அந்தச் சொல்லுக்கு மூன்று வகையான வியாக்யானங்கள் எழுந்தன. அவற்றின் அடிப்படையில் கேவலாத்வைதம், விசிஷ்டாத்வைதம், துவைதம் என மூன்று சித்தாந்தங்களை உபதேசித்தனர், முறையே சங்கரர், இராமானுஜர், மத்வர் என்னும் மூன்று ஆச்சார்யேந்திரர்கள். இம்மூவரும் நமது தென்னாட்டைச் சேர்ந்தவர்கள் என்பது நாமெல்லாம் பெருமைப்படுவதற்கு உரியதாகும்.

இம்மூவருள்ளும் காலத்தால் முந்தியவர் சங்கரரே ஆவர்.

அவர் ஸ்ரீ சிவபெருமானின் திரு அவதாரம் என்று போற்றப் படும் அளவுக்குப் புகழ் பெற்று விளங்கியவர். எல்லையற்ற ஆன்மீக பலம் படைத்தவர். ஸ்ரீ வித்யா பரம்பரையின் தலையாய ஆச்சார்யர்களில் ஒருவராக வழிபடப்படுபவர். மகத்தான தெய்விக சக்திகளைப் பெற்றிருந்தவர். அவர் நமது மாங்காட்டிற்கும் விஜயம் செய்திருக்கிறார்.

மாங்காட்டிலே அம்பிகை தவம் செய்யும் போது, அவள் எழுப்பிய பஞ்சாக்கினி குண்டங்களும், அவளைக் காவல் புரிந்த ஜ்வாலா மாலினி சக்தியின் அக்கினியும், மக்கட் கூட்டத்தை அந்த எல்லைக்குள்ளேயே புகவொட்டாமல் தடுத்து நிறுத்தின என்பதை நாம் முன்னமேயே கண்டோம். காமாட்சி பிலத்துவாரத்தின்வழியே காஞ்சிக்குச்சென்று, அங்கு ஏகாம்ர நாதரைத் திருமணம் செய்து கொண்ட பிறகும் கூட, மாங்காட்டின் எல்லை முழுதும் பரவி நின்ற ஸூக்ஷ்ம அக்கினி தன்னுடைய உக்கிரம் சிறிதளவும் தணியாமலே இருந்து வந்தது. அதனால், மாபெரும் யோகியர்களையும் ஞானியர்களையும் தவிர, வேறு எவருமே அந்தத் திருத்தலத்தை அணுக இயலாமல் ஆகி விட்டது.

### ஸ்ரீ ஆதிசங்கரின் அருட் செயல்

இப்படி எத்தனை நூற்றாண்டுகள் அல்லது ஆயிரம் ஆண்டுகள் கடந்தனவோ, அது யாருக்கும் தெரியாது. கடைசியாக, (நவீன ஆராய்ச்சியாளர்களின் கணக்குப்படி) சுமார் ஆயிரத்து இரு நூறு ஆண்டுகளுக்கு முன்பு, அங்கு ஸ்ரீ சங்கரர் வந்தார், பக்தர்களுக்கும் உபாசகர்களுக்கும் எளிதில் சித்திகளை வழங்கக்கூடிய அந்தத் திருத்தலமானது, எவராலும் நெருங்க இயலாதபடி ஸூக்ஷ்ம அக்கினியால் சூழப்பட்டிருப்பதைக் கண்டு, அவர் வியப்பு அடைந்தார். முக்காலங்களையும் உணர்ந்த மஹாஞானி ஆனதால், அதற்குக் காரணம் என்ன என்பது அவருக்குப் புலனாயிற்று. உடனே மக்கட் குலம் இனியேனும் இந்த மாங்காட்டுக்கு வந்து ஸ்ரீ லலிதாம்பிகையின் திருவருளுக்குத் தம்மை உரியவர்களாக்கிக் கொள்ள வேண்டும் என்ற கருணை அவர் உள்ளத்தில் பிறந்தது. அதற்காக அவர் ஒரு மங்கள காரியம் செய்தார்.

ஸ்ரீவித்யா உபாசகர்களால் தேவியின் உறைவிடங்களாகக் கருதப்படுபவை மூன்று. அவற்றை மந்த்ரம், தந்த்ரம், யந்த்ரம் என்று கூறுவார்கள். இவற்றுள் மந்த்ரம் என்பது

பஞ்சதசி, ஸௌபாக்ய வித்தை, மஹா ஷோடசீ போன்ற வற்றைக் குறிக்கும். தந்த்ரம் என்ருல் ஆகமங்கள். யந்த்ரம் என்ருல் ஸ்ரீ சக்ரம் எனப்படுகிற நாற்பத்து முக்கோணச் சக்ரம்.

ஸ்ரீ சக்ரத்தில் மேருப்ரஸ்தாரமென்றும், கைலாஸப்ரஸ் தாரமென்றும், பூப்ரஸ்தாரமென்றும் மூன்று வகைகள் உண்டு. இவை பற்றிய விவரங்கள் எல்லாம் உபாசகர்களுக்கு மட்டுமே தெரியும்.

ஸ்ரீ சக்ர மேருவில் இரண்டுவகைகள் உள; ஒன்று, பூர்ண மேரு; மற்ருென்று, அர்தமேரு, மாங்காட்டிலே அம்பிகை தவம் செய்த பிலத்துவாரத்தின் முகப்பிலே ஆதிசங்கரர் ஓர் அர்த மேருவை ஸ்தாபிதம் செய்தார். உடனே அந்த பிலத்து வாரத்தின் உள்ளிருந்து ஜ்வாலே வீசிக் கொண்டிருந்த பஞ்சாக் கினி தணிந்து அடங்கியது. அங்கு சூழ்ந்து நின்ற ஜ்வாலா மாலினி தேவியும், அந்த அர்த மேருவிலே வந்து லயமாயினுள். அதன் பிறகுதான் சாமான்ய மக்களால் மாங்காட்டின் எல்லேக்குள் தடையின்றி நடமாட முடிந்தது.

எந்த தேவதைக்குமே ஆலயங்களில் இரண்டு வடிவங்கள் உண்டு. ஒன்று, சிற்பியால் வடிக்கப்பட்ட சிலே வடிவம். மற் ருென்று, அந்தச் சிலேக்கு அடியில் பதிக்கப்பட்டுள்ள யந்த்ர வடிவம். இவ்விரண்டினுள்ளும், யந்த்ரத்திற்கே வீர்யம் அதிகம். யந்த்ரத்தின் மஹிமையால்தான் மூர்த்திக்கு மஹிமை ஏற்படுகிறது.

மாங்காட்டிலே ஸ்ரீ தேவியின் யந்த்ரம் ஆதிசங்கரரால் பிரதிஷ்டை செய்யப்பட்ட அர்தமேருவாகக் காட்சியளிக்கிறது. இந்த அர்தமேருவேறு—ஸ்ரீ லலிதாம்பிகையாகிய காமாட்சி வேறு அல்ல. ஸ்ரீ காமாட்சிதான் தன்னுடைய பூர்ணகலேகளோடு இங்கு அர்த மேருவாகக் காட்சியளிக்கிருள்,

### ஒன்பது வகையான யோகினிகள்

இந்த அர்தமேரு அஷ்டகந்தங்கள் எனப்படுகிற எட்டு வாசனேப் பொருட்களால் ஆக்கப்பட்டது. ஆகையால், அதற்கு அபிஷேகம் செய்யப்படுவதில்லே. அபிஷேகாதி உபசாரங்களுக்கு வசதியாக மேருவிற்குப் பின்புறத்தே ஓர் அழகான திவ்ய விக்ரஹத்தின் வடிவில், வலது கையிலே பசுங்கிளி ஒன்றை ஏந்திய திருக்கோலத்தோடு ஸ்ரீ பராம்பிகை நமக்கு தரிசனம் தருகிருள்.

பண்டாசுரனே வதம்செய்ய எழுந்த காலத்தில் தேவியானவள் சக்ரராஜம் என்னும் ரதத்திலே ஏறி அமர்ந்ததாகக் கூறப் பட்டது அல்லவா? அந்த ரதம்தான் பூர்ணமேரு. ரதத்தி னுடைய ஒன்பது தட்டுக்களும் பூர்ணமேருவில் ஒன்பது ஆவர ணங்களாக விளங்குகின்றன. த்ரைலோக்ய மோஹனம், ஸர்வா சாபரிபூரகம், ஸர்வஸம் க்ஷோபணம், ஸர்வ ஸௌபாக்ய தாயகம், ஸர்வார்த்தஸாதகம், ஸர்வ ரக்ஷாகரம், ஸர்வரோகஹரம், ஸர்வஸித்திப்ரதம், ஸர்வானந்தமயம் என்பவையே அந்த ஆவ

ரணங்களின் பெயர்கள். தேர்த்தட்டுகளைப் போல இவை ஒன்றன்மேல் ஒன்ருக அமைந்திருக்கும்.

அப்படிக்கின்றி, முதல் மூன்று ஆவரணங்கள் மட்டும் ஒன்றன்மேல் ஒன்ருக அமைந்து, மற்றைய ஆறு ஆவரணங்களும் ரேகைகளாகவோ, அல்லது அவை பொன்ற சிறுதடிப்புக்களாகவோ காட்சியளித்தால், அதனையே அர்தமேரு என்பர். மாங்காட்டிலே உள்ள அர்தமேரு பின்சொன்ன முறைப்படிதான் அமைந்திருக்கிறது.

இந்த அர்த மேருவின் அங்கங்களாக உள்ள ஒன்பது ஆவரணங்களிலும், முறையே பிரகடயோகினிகள், குப்தயோகினிகள், குப்தரயோகினிகள், ஸம்ப்ரதாய யோகினிகள், நிகர்பயோகினிகள், ரஹஸ்யயோகினிகள், அதிரஹஸ்யயோகினிகள், பராபராதி ரஹஸ்யயோகினி எனப்படும் ஒன்பது வகையான யோகினிகள் அமர்ந்திருக்கிருர்கள்.

அர்தமேருவில் கோயில் கொண்டிருக்கும் ஆவரண தேவதைகள்

முதலாவது ஆவரணமாகிய த்ரைலோக்ய மோஹனச் சக்ரத்தை பூபுரம் என்றும் சொல்வார்கள். நாற்புறத்திலும் வாயில்களை உடையதும், ஒன்றுக்குள் ஒன்று அடங்கியதுமான மூன்று சதுரங்களை இது தன் வடிவமாகக் கொண்டது. இவற்றுள் முதலாவது சதுரத்திலே அணிமா, லகிமா, மஹிமா, ஈசித்துவ, வசித்துவ, ப்ராகாம்ய, புக்தி, இச்சா, ப்ராப்தி, சர்வகாம சித்திகள் எனப்படும் பத்து சித்திகள் வீற்றிருக்கின்றனர்.

அதற்கு உள்ளே உள்ள இரண்டாவது சதுரத்தில் ப்ராஹ்மீ, மாஹேஸ்வரீ, கௌமாரீ, வைஷ்ணவீ, வாராஹீ, மாஹேந்தரீ, சாமுண்டா, மஹாலக்ஷ்மீ என்னும் எட்டு மாத்ருகா தேவிகள் அமர்ந்திருக்கின்றனர்.

அதற்கும் உட்புறமாக உள்ள மூன்ருவது சதுரத்தில் ஸர்வ ஸம்க்ஷோபிணீ, ஸர்வ வித்ராவிணீ, ஸர்வாகர்ஷிணீ, ஸர்வவசங்கரீ, ஸர்வோன்மாதினீ, ஸர்வ மஹாங்குசா, ஸர்வ கேசரீ, ஸர்வபீஜ, ஸர்வ யோனி, ஸர்வ த்ரிகண்டா என்னும் பத்து முத்ராசக்திகள் விளங்குகின்றனர்.

பூபுரத்தில் உள்ள இந்த இருபத்து எட்டு பிரகட யோகினிகளுக்கும்தலைவியாகக் கொலு வீற்றிருப்பவள் த்ரிபுரா தேவி என்னும் சக்ரேஸ்வரி ஆவள்.

இரண்டாவது ஆவரணமாகிய ஸர்வாசாபரிபூரகச் சக்ரமானது, பதினறு இதழ்களைக் கொண்ட ஒரு தாமரை மலரின் வடிவிலே அமைந்தது. இந்தப் பதினறு இதழ்களிலும் காமாகர்ஷிணீ, புத்யாகர்ஷிணீ, அஹங்காராகர்ஷிணீ, சப்தாகர்ஷிணீ, ஸ்பர்சாகர்ஷிணீ, ரூபாகர்ஷிணீ, ரஸாகர்ஷிணீ, கந்தாகர்ஷிணீ, சித்தா கர்ஷிணீ, தைர்யப கர்ஷிணீ, ஸ்மருத்யாகர்ஷிணீ, நாமாகர்ஷிணீ, பீஜாகர்ஷிணீ, ஆத்மா கர்ஷிணீ, அம்ருதா கர்ஷிணீ, சரீராகர்ஷிணீ என்கிற பதினறு நித்யா லாதேவிகளாகிய குப்த யோகினிகள் அமர்ந்து இருக்கின்றனர் இவர்களுக்குத் தலைவியாக விளங்குபவள் த்ரிபுரேசி என்னும் சக்ரேஸ்வரி ஆவள்.

மூன்றாவது ஆவரணமாகிய ஸர்வஸம்க்ஷோபணச் சக்ரமானது, எட்டு இதழ்களைக் கொண்ட ஒரு தாமரைமலர் போன்றவடிவினை உடையது. இந்த எட்டுஇதழ்களிலும்அனங்ககுஸுமாதேவீ, அனங்க மேகலாதேவீ, அனங்க மதனாதேவீ, அனங்கமதனாதுராதேவீ, அனங்க ரேகாதேவீ, அனங்கவேகினீதேவீ, அனங்காங்குசாதேவீ, அனங்கமா லினிதேவீ என்னும் எட்டுகுப்ததரயோகினிகள் வீற்றிருக்கின்றனர். இவர்களுக்குத்தலைவியாக விளங்குபவள் த்ரிபுரசுந்தரீசக்ரேஸ்வரி.

நான்காவது ஆவரணமாகியசர்வ ஸௌபாக்யதாயகச் சக்ர மானது, பதினான்கு முககோணங்களால் ஆகியது. இதனைச்சதுர் தசாரம்என்று சொல்வார்கள். இந்தப்பதினான்கு முக்கோணங்களி லும் ஸர்வஸம்க்ஷோபிணீ, ஸர்வவித்ராவிணீ, ஸர்வாகர்ஷிணீ, ஸர்வாஹ்லாதினீ, ஸர்வஸம்மோஹினீ, ஸர்வஸ்தம்பினீ, ஸர்வஜ்ரும் பிணீஸ்ர்வவசங்கரீ, ஸர்வரஞ்ஜினீ, ஸர்வோன்மாதினீ, ஸர்வார்த்த ஸாதினீ, ஸர்வஸம்பத்திபூரணீ, ஸர்வமந்த்ரமயீ, ஸர்வத்வந்த்வ க்ஷயங்கரீ என்னும் பதினான்கு சம்பிரதாய யோகினிகள் அமர்ந்து இருக்கின்றனர். இவர்களுக்குத் தலைவியாக வீற்றிருப்பவள் த்ரிபுர வாஸினீ சக்ரேஸ்வரி.

ஐந்தாவது ஆவரணமாகியஸர்வார்த்தஸாதகச் சக்ரமானது, பத்து முக்கோணங்களால் ஆகியது இதனை பஹிர்தசாரம் என்று சொல் வார்கள். இந்தப் பத்து முக்கோணங்களிலும் ஸர்வஸித்திப்ரதா, ஸர்வஸம்பத் ப்ரதா, ஸாவ ப்ரியங்கரீ, ஸர்வமங்கள காரிணீ, ஸர்வ காமப்ரதா, ஸர்வதுக்க விமோசனீ, ஸர்வம்ருத்யுப்ரசமனீ, ஸர்வ விக்னநிவாரிணீ, ஸர்வாங்கஸுந்தரீ, ஸர்வ ஸௌபாக்யதாயினீ என்னும் பத்து குலோத்தீர்ணயோகினிகள் உள்ளனர். இவர்களுக் குத்தலைவி த்ரிபுராஸ்ரீசக்ரேஸ்வரி:

ஆறுவது ஆவரணமாகிய ஸர்வரக்ஷாகரச்சக்ரமும் பத்து முக் கோணங்களால் ஆகியதே. இதனை அந்தர்தசாரம் என்று சொல் வார்கள். இந்தப் பத்து முககோணங்களிலும் ஸர்வஜ்ஞா, ஸர்வ சக்தி, ஸர்வஐஸ்வர்யப்ரதா, ஸர்வஜ்ஞானமயீ, ஸாவவ்யாதி விநாசினீ, ஸர்வாதாரஸ்வரூபா, ஸர்வபாபஹரா, ஸர்வானந்த மயீ, ஸர்வரக்ஷாஸ்வரூபிணீ, ஸர்வவேப்ஸிதபலப்ரதா என்கிற பத்து நிகர்ப யோகினிகள் அமர்ந்துள்ளனர். இவர்களுக்குத் தலைவி த்ரிபுரமாலினீ சக்ரேஸ்வரீ.

ஏழாவது ஆபரணமாகிய ஸர்வரோகஹரச்சக்ரமானது, எட்டு முக்கோணங்களால் ஆகியது. இதனை அஷ்டாரம் என்று சொல்வார்கள். இந்த எட்டு முக்கோணங்களிலும் வசினீ, காமேஸ்வரீ, மோதினீ, விமலா, அருணா, ஜயினீ, ஸர்வேஸ்வரீ, கௌலினீ என்னும் வாக்தேவதைகளான எட்டுரஹஸ்ய யோகி னிகள் இருக்கின்றனர். இவர்களுக்குத்தலைவியாக வீற்றிருப்பவள் த்ரிபுராஸித்தா சக்ரேஸ்வரீ.

எட்டாவது ஆவரணமாகிய ஸர்வஸித்திப்ரதச் சக்ரமானது ஒரேயொரு முக்கோணவடிவில் ஆனது. இதனுடைய மூன்று கோணங்களிலும் மஹாகாமேஸ்வரீ, மஹாவஜ்ரேஸ்வரீ, மஹா பகமாலினீ என்கிற மூன்று அதிரஹஸ்யயோகினிகள் அமர்ந்

துள்ளனர். இவர்களுக்குத் தலைவியாக விளங்குபவள் த்ரிபுராம்பா சக்ரேஸ்வரீ.

இந்த முக்கோணத்திற்கு வெளியே நாற்புரங்களிலும் பாணினீ, சாபினீ, பாசினீ, அங்குசினீ என்கிற நான்கு சக்திகள் இருக்கின்றனர். இவர்கள் முறையே ஸ்ரீலலிதாம்பிகையின் ஆயுதங்களாகிய புஷ்பபாணம், கரும்பு வில், பாசம், அங்குசம் இவற்றின் அதிதேவதைகளாவர். இவர்களுக்கு ஆயுதசக்திகள் என்று பெயர்.

முக்கோணத்தைச் சேர்ந்த மூன்று கோடுகளிலும், பதினைந்து நித்யாதேவதைகள் வாழ்கின்றனர். காமேஸ்வரீ, பகமாலினீ, நித்யக்லிந்நா, பேருண்டா, வன்னிவாஸினீ, மஹாவஜ்ரேஸ்வரீ, சிவாதூதீ, த்வரிதா, குலஸுந்தரீ, நித்யா, நீலபதாகா, விஜயா, ஸர்வ மங்களா, ஜ்வாலாமாலினீ, சித்ரா என்பவை இவர்களின் திருநாமங்கள். பிரதமை முதலான பதினைந்து திதிகளுக்கும் இவர்களே அதிதேவதைகள். இவர்களுக்குத் தலைவியாக, லலிதா மஹா நித்யா என்னும் திருப்பெயரோடு ஸ்ரீலலிதாம்பிகையே பிந்து ஸ்தானத்தில் விளங்கிக்கொண்டிருக்கிறாள்.

பிந்து ஸ்தானம் என்பது, மேற்கூறிய ஸர்வஸித்தி ப்ரதச் சக்ரம் என்ற முக்கோணத்தின் நடுவே, அம்முக்கோணத்தின் மூன்று ரேகைகளையும் தீண்டியவாறு அமைந்துள்ள ஒரு வட்டம் ஆகும். இதுவே ஸர்வானந்த மயச்சக்ரம் எனப்படுகிற ஒன்பதாவது ஆவரணம். இந்த ஆவரணத்தில் ஸ்ரீ லலிதாம்பிகையே பராபராதி ரஹஸ்ய யோகினியாகவும். ஸ்ரீ மஹாத்ரிபுரசுந்தரி என்ற சக்ரேஸ்வரியாகவும் விளங்குகிறாள். இங்கு அவள் வீற்றிருக்கும் காட்சியைப் பின்வருமாறு தியானிக்க வேண்டும்:-

### தேவியை தியானிக்க வேண்டிய முறை.

சிந்தாமணி கிருஹம் என்ற அரண்மனையிலே, பஞ்ச பிரம்மாசனம் என்ற ஒரு கட்டில். பிரம்மா, விஷ்ணு, உருத்திரன், ஈஸ்வரன் இந்நால்வரும் அக்கட்டிலின் நான்கு கால்களாக அமர்ந்திருக்கின்றனர். இந்தக் கால்களுக்கு மேலே உள்ள பலகையாகத் தன்னை ஆக்கிக் கொண்டு, சதாசிவன் படுத்திருக்கிறார். அவருக்கு மேலே காமேஸ்வரனது இடது துடையின்மேல் கொலு வீற்றிருக்கிறாள் ஸ்ரீ லலிதாம்பிகை.

அவளுடைய நவமணி மகுடத்திலே பிறைச் சந்திரன் ஓர் ஆபரணமாகச்சூடப்பட்டு இருக்கிறான். சூரிய சந்திரர்கள் முறையே அவளது வலது காதிலும் இடது காதிலும் இரண்டு தாடங்கங்களாக (அதாவது. தோடுகளாக) ஒளி வீசுகின்றனர். பாசம், அங்குசம் இவ்விரண்டு ஆயுதங்களும் அவளது மேற்கைகள் இரண்டிலும்: கரும்புவில், புஷ்பபாணம் இவ்விரண்டு ஆயுதங்களும் அவளது கீழ்க்கைகள் இரண்டிலும் காட்சியளிக்கின்றன. இவற்றுள், இடது மேற்கையில் உள்ள பாசக்கயிறு பவளம் போல் சிவப்பு நிறமானது வலது மேற்கையிலுள்ள அங்குசம் வெண்மை நிறமானது, இடது கீழ்க்கையிலுள்ள வில் ஒரு நாமக்கரும்பு. தாமரை, நீலோத்பலம், மாம்பூ, அசோகமலர், மல்லிகைப்பூ இவ்வைந்தும் அவளது வலது கீழ்க்கையிலுள்ள புஷ்பபாணங்கள்.

அம்பிகை செம்மை நிறமான காந்தியோடு விளங்குபவள். அவள் அணிந்திருக்கும் பட்டாடை, கச்சு ஆகியவையும் செந்நிற மானவையே. அவள் நித்யயௌவன சுந்தரி. ஸர்வாபரண பூஷிதை. காமேஸ்வரனுல் அணிவிக்கப்பட்ட திருமாங்கல்யம் அவளது கழுத்திலே ஒளிர்கின்றது. அவளுக்கு மூன்று கண்கள் உண்டு. ஆனுல் மூன்ருவதாகிய நெற்றிக்கண் சிந்தூர திலகத்தினுல் மறைபட்டிருக்கும். அவளது வலது புறத்திலே ஸரஸ்வதியும், இடது புறத்திலே லக்ஷ்மியும் நின்று சாமரம் வீசுவார்கள்.

அவளுடைய பாதங்களிலே இரண்டு பாதுகைகள் உண்டு. அவற்றுள் வலது பாதுகை வெண்ணிறமாகவும், இடது பாதுகை செந்நிறமாகவும் காட்சியளிக்கும். தேவியின் உபாசனையில் இந்த ஸ்ரீபாதுகைகளுக்குதான் பூஜையும் தர்ப்பணமும் செய்யப் படுகின்றன.

தகட்டில் வரையப்பட்ட ஸ்ரீ சக்ரத்தையோ, அல்லது மேரு' அர்தமேரு ஆகியவற்றையோ பூஜை செய்வது என்ருல், ஒரு தகுந்த குருவிடமிருந்து அதற்குரிய மந்த்ர தீட்சையைப் பெற்றிருக்கவேண்டும். தீட்சை பெருதவர்கள் அவற்றை முறைப்படி பூஜை செய்வதற்கு அதிகாரிகள் அல்லர்.

ஸ்ரீசக்ர பூஜைக்கு நவாவரண பூஜை என்றும் பெயர். ஸ்ரீசக்ரத்திலே ஒன்பது ஆவரணங்கள் இருப்பதால் அதற்கு இந்தப் பெயர் வந்தது. இந்தப் பூஜையினுல் கிடைக்கக்கூடிய பலனகளே இவ்வளவு அவ்வளவு என்று கூற முடியாது. இதை முறைப்படி செய்து விட்டால், ஓர் அஸ்வமேத யாகம் செய்வதனுலாய பயன் கிடைக்கும் என்று சாத்திரங்களில் கூறப்பட்டுள்ளது. சுருக்க மாகச் சொன்னுல், இந்தப் பூஜையைச் செய்பவர்கள் தம் வாழ் நாளிலே உத்தமமான சுகபோகங்கள் அனைத்தையும் பெற்று, தாம் பிறவி எடுத்த பெரும் பயனையும் எய்துவார்கள். அவர் களுக்கு மறுபிறவி கிடையாது என்பது மகரிஷிகளின் துணிபு.

காஞ்சி மாமுனிவரின் மாங்காட்டு விஜயம்.

எல்லையற்றகல்வி, எல்லையற்ற செல்வம், எல்லையற்ற ஆற்றல் இவற்ருேடு கூடிய தீர்காயுளைத் தருவது ஸ்ரீசக்ர பூஜை. அந்தப் பூஜையைத் தாமே செய்வதற்கு அதிகாரம் இல்லாதவர்கள், மாங்காட்டிற்கு வந்து, அர்தமேரு வடிவில் விளங்கும் தேவி காமாட்சியை தரிசிப்பதன் மூலம் அதே பலன்களை அடைய இயலும். அவர்கள் அவ்வாறு அடையவேண்டும் என்பதற்காகவே, ஆதிசங்கரர் அந்த அர்த மேருவை அங்கு கருணையோடு பிரதிஷ்டை செய்து வைத்தார் என்பது சான்ருேர் கருத்து.

அது மட்டுமல்ல. தேவி காமாட்சி பஞ்சாக்கினி மத்தியிலே இடது கால் பெருவிரல் மேல் நின்று பன்னெடுங்காலம் தவம் புரிந்த இடமாகையால், அவளை தரிசிப்பதற்காக இங்கு வருபவர்கள் எல்லாம் தாமும் தவம் உடையவர்களாகி விடு கிருர்கள். ஒரு தீபத்தின் ஒளியானது அதன் எல்லைக்குள்ளே வருபவர்களுக்கெல்லாம் பயன்தருவது போல. அம்பிகை செய்த அருந்தவமானது அந்த மாங்காட்டின் எல்லைக்குள்ளே வருகிற

அனைவருக்கும் அவர்கள் விரும்பிய பலன்களைத் தந்து கொண்டிருக்கிறது.

ஆனால், அந்தப் பலன்களைப் பெறுவதற்கும் ஒரு பாக்கியம் வேண்டும் அல்லவா? அந்த பாக்யம் பெறாதவர்களைக் காட்டிலும் பெற்றவர்கள் எப்போதுமே எண்ணிக்கையில் குறைவாகத்தான் இருப்பார்கள். இது உலக இயற்கை. அதனால்தான், ''த்வமும் தவமுடையார்க்கு ஆகும்'' என்றார் பொய்யா மொழியார்.

அத்த முறையில், முற்பிறவிகளிலோ அல்லது இப்பிறவியிலோ உயரிய தவப் பேறு உடைய மகான்களும் உபாசகர்களுமே, மாங்காட்டுக்கு வந்து தேவியை தரிசனம் செய்யும் பாக்கியத்தைப் பெற்றிருந்தார்கள் என்று சொல்ல வேண்டியதிருக்கிறது. ஏனென்றால், கடந்த சில ஆண்டுகளுக்கு முன்புவரையில், சாமான்ய மக்கள் அங்கு அதிகமாக வந்துபோவதில்லை என்று கூறப்படுகிறது.

இந்த நிலையில், 1960ஆம் ஆண்டிலே, காஞ்சி காமகோடி பீடாதிபதிகளாகிய ஜகத்குரு ஸ்ரீசந்திரசேகரேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள், நம் போன்றவர்கள் செய்த தவப்பயன் காரணமாக மாங்காட்டிற்கு விஜயம் செய்தார்கள். வேண்டுவார் வேண்டுவதை அருளவல்லதும், ஸ்ரீ ஆதிசங்கரரால் பிரதிஷ்டை செய்யப்பட்டதுமான மஹா தெய்விக சக்திகள் வாய்ந்த ஓர் அர்த மேரு அங்கு இருந்தும் கூட, அதை தரிசித்துப் பயன் பெறுவதிலே மக்கள் அவ்வளவாக ஆர்வம் இல்லாதிருப்பதைக் கண்டு, அவர்களது கருணை உள்ளம் வேதனை அடைந்தது. தான் வழக்கமாகப் படுத்து உறங்கும் கட்டிலுக்கு அடியிலே ஒரு பெரும் புதையல் இருப்பதை அறியாமல், ஒருவன் நாள்தோறும் காலை முதல் மாலை வரையில் பிச்சை எடுத்தே வயிறு வளர்த்து வந்தானும். அதே போல், அள்ள அள்ளக் குறையாத ஓர் அளப்பரும் திருவருட் களஞ்சியம் மாங்காட்டிலே இருந்தும், அதை அறியாமல் மக்கள் தம் குறைகளைப் போக்கிக் கொள்வதற்காக எங்கெங்கோ அலைந்து ஏங்கித் தவிக்கிறார்களே என்று ஸ்ரீ ஆச்சார்ய ஸ்வாமிகள் இரக்கம் கொண்டார்கள். அங்குள்ள பரம்பரை அர்ச்சகராகிய மறைத்திரு ஏகாம்பர சிவாச்சாரியாரிடத்தில் இது பற்றி உரையாடினார்கள்.

தெய்வ ஸாந்நித்யம் எப்போது பிரகாசிக்கிறது?

''அர்ச்சகஸ்ய தபோயோகாத்
அர்ச்சநஸ்யாதி சாயநாத் |
ஆபிரூப்யாஸ்ச மூர்த்தீநாம்
தைவம் ஸாந்நித்யம்ருச்சதி ||

இந்த சுலோகத்தின்படி, ஒரு தெய்வத்தின் சாந்நித்யமானது மூன்று காரணங்களால் பிரகாசம் அடைகிறது. முதலாவது காரணம், அர்ச்சகருடைய தவயோகங்கள். இரண்டாவது காரணம், அங்கு நடைபெறுகிற விசேஷமான ஆராதனைகள். மூன்றாவது காரணம், அங்குள்ள மூர்த்திக்குச் செய்யப்படுகிற உத்தமமான அலங்காரங்கள். இம்மூன்றும் முறையே உத்தம, மத்யம, அதம உபாயங்கள் என்று சொல்லப்படும்.

இவற்றுள் இரண்டாவது மூன்ருவது உபாயங்களான பூஜை கள் அலங்காரங்கள் ஆகியவற்றிற்கு, நிரம்பப் பொருள் வசதி தேவைப்படும் ஆனல் முதலாவது உபாயத்திற்கு அது தேவை யில்லை. அர்ச்சகருடைய உழைப்பு ஒன்று தான் அதற்குத் தேவை. அம்பிகைக்குத் தம்மால் ஆன எந்த உழைப்பையும் இனிதே நல்கு வதற்கு ஆயத்தமாக இருந்தார் அர்ச்சகர் ஏகாம்பர சிவாச்சார் யர்.

ஆதி சங்கரரின் மறு அவதாரமோ, அல்லது நம்மிடையே கால் நிலம் தோய நடமாடித்திரியும் ஸ்ரீபராம்பிகையின் வடிவம் தானே, அல்லது இந்த நூற்றுண்டில் வாழ்கின்ற தமிழ்ப் பெருமக்க ளது தவத்தின் ஸ்வரூபமோ என்று போற்றற்குரிய காஞ்சி ஸ்ரீசங் கராசார்ய ஸ்வாமிகளின் ஆணையை சிரமேற்கொண்டு, அவர்கள் காட்டிய நெறியே நின்று, ஆலயத்தினுள்ளே நாள்தோறும் தீவிர மான ஜபயோக சாதனையில் ஈடுபடலானுர் ஸ்ரீ ஏகாம்பர சிவாச் சார்யர். அதன் பலனைத்தான் இன்று நாள் தோறும் ஆயிரக் கணக்கில் வந்து பெருகி வழிகின்ற பக்தர்களின் கூட்டத்திலே நாம் பார்த்து மகிழ்கிறோம்.

"உரு ஏறத் திரு ஏறும்" என்பது அன்றோர் கண்ட அனுபவ உண்மை. அந்த நியதிப் படியே, சிவாச்சார்யரின் ஜபயக்ஞம் ஏறஏற, ஆலயத்திற்கு வரும் மக்களின் கூட்டமும் பெருகிக் கொண்டே வந்தது. கோயில் அதிகாரிகளால் எளிதில் சமாளிக்க முடியாத அளவுக்கு, இன்னமும் பெருகிக் கொண்டேவருகிறது.

# 9. எது வேண்டினும் பெறலாம்

சென்னைக்கு அருகே உள்ள பழவந்தாங்கல் என்னும் கிராமத் திலே, ஸ்ரீசிதானந்த நாதர் என்ற ஒருமகான் வாழ்ந்து வந்தார். (அவருடைய இயற்பெயர் பிரம்மஸ்ரீ ந. சுப்ரமண்யஐயர்) அவர் தான் ஸ்ரீகுஹானந்த மண்டலி என்னும் புகழ்மிக்க ஸ்ரீவித்யா மண்டலியை நிறுவியவர். இப்புத்தகத்தின் முற்பகுதியிலே நான் குறிப்பிட்டுள்ள ஸ்ரீவித்யா வாசஸ்பதி— ஸ்ரீவித்யா மார்த் தாண்ட பிம்மஸ்ரீ C.V.ஸ்வாமிகள் சாஸ்திரிகள் ஆத்ம வித்யா பூஷணம் பிரம்மஸ்ரீ V ஜகதீச சாஸ்திரிகள் போன்ற பல உபாசக சிரேஷ்டர்களுக்கு அவர் ஆச்சார்யேந்திரராக விளங்கியவர்.

அந்த எம்பொருமான் 1939 ஆம்ஆண்டில் மாங்காட்டிற்குச் சென்ருர். நான் மேலே குறிப்பிட்டுள்ள ஏகாம்பர சிவாச்சார் யரின் தந்தை ஸ்ரீ துரைஸ்வாமி சிவாச்சார்யர் அப்போது ஸ்ரீகாமட்சியம்மன் கோயில் அர்ச்சகராக இருந்தார்.

பூஜைகளில் சிவாகம முறைகள் வேறு,ஸ்ரீ வித்யா பத்ததிகள் வேறு. சிவாச்சார்யர்கள் பொதுவாக ஸ்ரீவித்யா முறைகளில் அவ்வளவாக ஈடுபாடு காட்டுவது இல்லை.

ஆனல், மாங்காட்டில் உள்ள அர்தமேருவானது ஸ்ரீவித்யா பத்ததிப்படி மட்டுமே பூஜை செய்யப்படுவதற்கு உரியதாகும்.

பூஜைகளில் தேவதைக்குச்சில முத்திரைகள் காட்டப் பட வேண்டும். அந்த முத்திரைகளில் சிவ பூஜைக்கும், ஸ்ரீ வித்யாபர மான அம்பிகையின் பூஜைக்கும் பல வேறு பாடுகள் உண்டு, அந்த வேறுபாடுகளை ஸ்ரீ துரைஸ்வாமி சிவாச் சார்யருக்கு விளக்கிக்கூறி, பரசுராம கல்பத்தை அனு சரிந்துத் தாம் வெளியிட்டுள்ள ''ஸ்ரீவித்யா ஸபர்யா பத்ததி'' என்ற பூஜாக்கிரம நூலையும் அவருக்கு அன்பளிப்பாக வழங்கினர் ஆச்சார்ய சிதானந்தர். அது முதற்கொண்டு, அந்தப் பத்ததியின் படியே முறையான நவாவரண பூஜை அங்கு நடந்துவருகிறது. நம் தமிழ்நாட்டிலும், ஆந்திரப் பிரதேசம், கர்நாடகம் போன்ற அண்டை மாநிலங்களிலும், பெரும்பாலான ஸ்ரீவித்யா உபாசகர் கள், அவர்கள் பல்வேறு மண்டலிகளைச் சேர்ந்தவர்களாய் இருப் பினும், ஸ்ரீ சிதானந்தர் வெளியிட்டுள்ள ஸபர்யா பத்ததியைப் பின்பற்றித்தான் நவாவரண பூஜை செய்து வருகிறார்கள் என்பது இங்கு குறிப்பிடதக்கது.

இப்போது அம்பிகையின் ஆலயத்திற்கு வந்து வழிபட்டுச் செல்லும் பக்தர்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் பெருகிக் கொண்டே வருகிறது. அவர்கள் காணிக்கைச் செலுத்தும் பொன்னும் பொருளும் அங்கு வைக்கப்பட்டிருக்கும் உண்டியல் களை மீண்டும் மீண்டும் நிரப்பிக் கொண்டிருக்கின்றன. யாருக்கு என்ன குறை இருந்தாலும, மாங்காட்டுக்கு வந்தால் அது தீர்ந்து விடுகிறது என்பதை மக்கள் அனுபவபூர்வமாக அறிந்து கொண்டு வருகிறார்கள். எந்தக் கோரிக்கையாக இருந்தாலும், தொடர்ந்து ஆறுவ ரகாலம் ஆலயத்திற்கு வந்து போனால், அம்பிகை அதை நிறைவேற்றிக் கொடுத்து விடுகிறாள்.

உத்தியோகம் இல்லாதவர்களுக்கு உத்தியோகம் கிடைக் கிறது. திருமணம் ஆகாத ஆண்களுக்கும் பெண்களுக்கும் திரு மணம் கைகூடுகிறது. நீதிமன்றங்களில் நியாயம் கிடைக்காமல் தோற்றுவிடும்போல் தோன்றுகிற வழக்குகள் வெற்றி அடை கின்றன. காதலியைக் கைவிட்டுச் சென்ற காதலன் தானவே திரும்பி வந்து அவளைத் திருமணம் செய்து கொள்கிறான். இழந்து போன அல்லது காணாமல் போன பணம் திரும்பக் கிடைக்கிறது. மரணப்படுக்கையில் இருப்பவர் உயிர்பெற்று எழுந்திருக்கிறார். மாணவர்கள் தேர்வுகளிலே வெற்றி பெறுகிறார்கள். இப்படி எத்தனையோ செய்திகளை அங்கு வரும் பக்தர்களிடையே நாம் கேட்கிறோம் இந்தக் கலிகாலத்தில் இப்படியும் அற்புதங்கள் நடக் குமா என்று நாம் வியப்பபை யும் விதத்தில், அவற்றுள் பல செய்திகள் அமைந்திருக்கின்றன.

## ஆறுவார ஆலய தரிசன முறை

ஒரு குறை நீங்கவேண்டும், அல்லது ஒரு கோரிக்கை நிறை வேற வேண்டும் என்ற பிரார்த்தனையை உடையவர்கள், அருள் மிகு காமாட்சி அம்மனின் ஆலயத்திற்குத் தொடர்ந்து ஆறுவார காலம் அவர்களுக்கு சௌகர்யமான ஏதேனும் ஒரு குறிப்பிட்ட கிழமையிலே சென்று வரவேண்டும்.

முதல் வாரத்திலே கையில் இரண்டு எலுமிச்சம் பழங்களை எடுத்துச் சென்று, அவற்றுள் ஒன்றைக் கோயிலில் விட்டுவிட்டு, மற்றொன்றை வீட்டுக்குக் கொண்டு வரவேண்டும். வீட்டில் ஒருவார காலம் அதற்குச் சந்தனம், புஷ்பம், தூபம், தீபம், ஏதேனும் ஒரு சிறு நைவேத்தியம் ஆகிய உபசாரங் களைச் செய்து, எட்டாம் நாளன்று அதனையும், அதனோடு மேற்கொண்டு இரண்டு புதிய எலுமிச்சம் பழங்களை யும் மாங்காட்டிற்குக் கொண்டு செல்லவேண்டும். அந்தப் பழைய பழத்தையும், புதிய பழத்தில் ஒன் றையும் கோயிலிலே கொடுத்து விட்டு, மற்றொரு புதிய பழத்தை வீட்டுக்கு எடுத்து வந்து, அதை முன்போலவே நாள்தோறும் ஒரு வார காலம் பூஜை செய்ய வேண்டும்.



இப்படியே வாராவாரம் ஒரு பழைய பழமும், இரண்டு புதிய பழங்களும் கோயிலுக்கு எடுத்துச் சென்று, அவற்றுள் ஒரு புதிய பழத்தை மட்டும் வீட்டுக்கு எடுத்து வந்து பூஜை செய்ய வேண்டும். ஐந்து வாரகாலம் இப்படிப் பூஜை செய்த பிறகு, ஆறுவது வாரததில் பழைய பழம் ஒன்றை மட்டும் கொண்டு போய்க் கோயிலில் கொடுத்துவிடவேண்டும். அப்போது புதிய பழம் எதுவும் கொண்டுபோக வேண்டியதில்லை. அதற்கு பதிலாக, ஒரு லிட்டர் பசுவின்பாலைச் சர்க்கரை அல்லது கற்கண்டு போட்டுக் காய்ச்சிக் கையில் எடுத்துச் செல்ல வேண்டும் அத்துடன் கொஞ்சம் சுத்த மான தேனும் கொண்டு செல்ல வேண்டும்,

கோயில் அர்ச்சகர்கள் அந்தத் தேனைப் பாலோடு கலந்து அம்பிகைக்கு நிவேதனம் பண்ணி, அந்தப் பிரசாதத்தை அங்கு வரும் பக்தர்களுக்கு வினியோகம் செய்வார்கள். பக்தர்கள் அந்தப் பாலைப் பருகி மகிழும்போது, அம்பிகையும் உளம்மகிழ்ந்து நமது கோரிக்கைகளை இனிதே நிறைவேற்றி வைக்கிறாள்.

மாங்காட்டு மஹாதேவி இன்று நமக்கெல்லாம் கண்கண்ட தெய்வ மாகக் காட்சி அளிக்கிறாள். அவளை தரிசனம் செய்பவர்களுக்கு

கை கண்ட பலன்கள் கிடைக்கின்றன. ஆகையால், வாழ்வில் நமக்கு என்ன குறைகள் இருந்தாலும், எத்தனை ஆபத்துக்கள் வந்தாலும், அவற்றைப் பற்றி நாம் சிறிதும் கவலைப்பட வேண்டியதில்லை. உள்ளத்தில் உண்மையான பக்தி சிரத்தையோடு, நாம் அம்பிகையைப் போய் வழிபட்டு வந்தால் போதும். ஆறு வாரம் என்ன? ஆறுநாட்களிலேயே, ஆறுமணி நேரத்திலேயேகூட அவளது அருளைப் பெற்று ஆனந்தம் அடைந்தவர்கள் அனேகர் உண்டு.

ஆனால், காரியம் கைகூடி விட்டது என்பதற்காக ஆலயதரிசனத்தை நடுவே நிறுத்திவிடக்கூடாது. தொடர்ந்து ஆறுவார காலம் மேற்கூறிய முறைப்படி அதனைச் செய்தே தீரவேண்டும். அத்துடன், அம்பிகையை வழிபடச் செல்பவர்கள் பக்கத்திலுள்ள அருள்மிகு பார்கவேஸ்வரர் ஆலயத்தையும், ஸ்ரீ வைகுண்ட நாதர் ஆலயத்தையும் தரிசித்துவருவது, மிகவும் விசேஷமான சுபபலன்களை விரைவில் பெருவதற்குரிய வழியாகும்.

சுபம்